15th December 1961]

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (No. 7) Bill, 1961 (L.A. Bill No. 59 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

(3) THE MADRAS APPROPRIATION (VOTE ON ACCOUNT) BILL, 1961 (L.A. BILL NO. 58 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Appropriation (Vote on Account) Bill, 1961 (L.A. Bill No. 58 of 1961) be taken into consideration.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (Vote on Account) Bill, 1961 (L.A. Bill No. 58 of 1961) be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

Clause 3 and the Schedule were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'That the Madras Appropriation (Vote on Account) Bill, 1961 (L.A. Bill No. 58 of 1961) be passed.'

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras Appropriation (Vote on Account) Bill. 1961 (L.A. Bill No. 58 of 1961) be passed.'

SRI M. KALYANASUNDARAM : உதவி சபாநாயகர் அவர்களே, இப்போது நாம் நிறைவேற்றியிருக்கக் கூடிய மசோதாவானது ஏப்ரல் மாதத்திலிருந்து நான்கு மாதங்களுக்கு புதிய மந்திரி சபை பதவி ஏற்கும்போது, தேர்தலுக்குப் பிறகு அவர்கள் செலவு செய்யவேண்டிய தொகையை ஒதுக்கும் முறையில் நிறைவேற்றப் படுகிறது. பிறகு புதிய பட்ஜெட் நிறைவேற இருக்கிறது, புதிய சட்ட சபையினுலே—தேர்தலுக்குப் பிறகு வரக்கூடிய சட்ட சபையினுலே இந்த கோரிக்கையைப் பிரேரிக்கும்போதே, இந்த நிதி நிலை அறிக்கையை சமர்ப்பிக்கும்போதே —நான் அந்த நேரத்தில் பங்கு எடுத்துக் கொள்ள முடியாததற்கு வருந்துகிறேன். இப்போதும் கூட பூர்ணமாக எனது கடமையைச் செய்ய முடியவில்லையே என்று தான் வருந்த நேரிடுகிறது—நிதி அமைச்சர் அவர்கள் பேசும்போது, விவாதத்திற்கு பதில் அளிக்கும்போது, 'நமது நிதி நிலைமையிலே பூர்ணமாக நான் 100 கோடியை எட்டிப் பிடிக்க முடியவில்லையே. நான் இப்போது 100 கோடியை எட்டிப் பிடிக்காமலேயே பதவியிலிருந்து விலகுகிறேன்

என்று வருந்தினர். அவர்களுக்கு இருக்கக்கூடிய நியாயமான மனக்குறை தான் அது. இப்போது—அவர் பேசுகிற நேரத்தில் 100 கோடியை எட்டிப் பிடிக்காவிட்டாலும், நிச்சயமாக புதிய சட்ட சபையில் திருத்தி அமைக்கப்பட்டு நிதி நிலை அறிக்கை சமர்ப்பிக்கப்படும்போது அது 100 கோடியை எட்டிவிடும் என்று நான் நம்புகிறேன். முதன் முதல் நமது ராஜ்யத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரி சபை 1935-ம் ஆண்டு அரசியல் சட்டத்தின் கீழ் தோன்றிய காலத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இப்போது வளர்ச்சிகரமான மாறுதல் ஏற்பட்டிருப்பதை பார்க்கலாம். 1937-38-ம் ஆண்டில் ஆந்திராவும், மலபாரும் இருந்தபோதே நமது மொத்த பட்ஜெட்டே 16 கோடி ரூபாய். இப்போது கிட்டத் தட்ட 100 கோடி ரூபாய். ஒரு இனத்தின் வருமானம் மட்டும் உதாரணத்திற்கு, விற்பனை வரியை எடுத்துக்கொண்டால், அதன் வருமானம் மட்டும் 21 கோடி ரூபாய்—அப்போது பட்ஜெட்டே 16 கோடி ரூபாய். ஒரு இனத்தில் செலவழித்த தொகையை எடுத்துக்கொண்டாலும், கல்வியில் மட்டும் 23 கோடி ரூபாய் செலவழித்திருக்கிறோம்—அப்போது பட்ஜெட் பூராவுமே 16 கோடிதான். அப்படிப் பார்க்கும்போது ஒரு இலாகாவின் செலவு கூட ஒரு அரசாங்கத்தின் செலவைவிட 15-20 வருஷ காலத்தில் அதிகரிக்கும் அளவுக்கு வளர்ச்சி அடைந்திருக்கிறதே என்று நிதி அமைச்சர் அவர்கள் பெருமைப்படலாம், அவர் சந்தோஷப்படலாம். அந்த அளவுக்கு வளர்ச்சி இருப்பதை நானும் உணர்கிறேன். பாராட்டுகிறேன். அடுத்து வரும் நிதி நிலை அறிக்கையில் 100 கோடியை எட்டிப் பிடிக்கலாம் என்று சொல்லுகிறார்கள். ஆனால் 100 கோடியில் உண்மையிலேயே வருமானம் 92 கோடி தான். இன்னும் 7 கோடி ரூபாய் துண்டு விழுவதை ஈடு செய்யலாம் என்று சொல்லுகிறார்கள். அது பின்னால் பார்க்க வேண்டியது. இதில் ஒன்று பார்க்க வேண்டும், 92 கோடி ரூபாயில் எந்த மாதிரி இந்த வருமானம் அபிவிருத்தி அடைந்து வந்திருக்கிறது ? கடந்த ஐந்து வருஷத்தை எடுத்துப் பார்க்கலாம். எப்படி வருமானம் விருத்தி அடைந்து வந்திருக்கிறது? ராஜ்ய சர்க்கார் விதிக்கும் வரி 32 கோடியிலிருந்து 44 கோடியாக அதிகரித்திருக்கிறது. ஐந்து வருஷத்திற்கு முன்னால் எடுத்துப்பார்த்தால், —இரண்டாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்ப காலத்தை எடுத்துப் பார்த்தால், ராஜ்ய சர்க்கார் வரி வருமானம் மூலம் வந்த தொகை 32 கோடி இப்போது 44 கோடியாக, அதாவது 36 சதவீதத்திற்கும் அதிகாக ராஜ்ய சர்க்காருடைய வரி ஐந்து வருஷத்தில் அதிகரித்திருக்கிறது. அதுவும் 44 கோடி அதிகரித்திருப்பதை எப்படி நாம் கணக்குப் போட வேண்டும் ? சில வரி இனங்களை மத்திய சர்க்காருக்கு விட்டிருக்கிறோம். அப்படி விட்ட பிறகு 44 கோடியாக உயர்ந்திருக்கிறது. மதிப்புக்குரிய ராமசாமி முதலியார் அவர்கள் குறிப்பிடும்போது விற்பனை வரி அதிகமாக வசூலிக்கவில்லை என்று தவறிச் சொல்லி விட்டார்கள் என்று நினைக்கிறேன். விற்பனை வரியானது 21 கோடியாக உயர்ந்திருக்கிறது. அவர்கள் மனதில் 'ஏமாற்றுதல்' இருக்கின்றது, அதைக் கண்டுபிடிக்கவேண்டும் என்று கூறியிருப்பார் என்று

15th December 1961] [Sri M. Kalyanasundaram]

நினைக்கிறேன். அவர் அதை மனதில்கொண்டு கூறியிருந்தால், அதை நான் ஒத்துக்கொள்கிறேன். அதுதான் மனதில் இருந்தால், இப்போது இருக்கக்கூடிய 21 கோடி 23 கோடி வரையில் உயர சந்தர்ப்பம் இருக்கிறது. ஏமாற்றுதல் பல விதமாக இருக்கிறது. அவர்கள் ஏனோ செக்-போஸ்ட்டை மட்டும் பிடித்தார்கள். செக்-போஸ்டிலே ஏமற்றாறுகிறார்கள். கடையிலேயே உட்கார்ந்து ஏமாற்றுகிறார்கள், அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி ஏமாற்றுகிறார்கள், விவரம் அவர்களுக்கும் தெரியும், நாமும் புரிந்துகொண்டிருக்கிறோம். ராஜ்ய சர்க்கார் வரியிலும் எந்த இனத்தில் வருமானம் அதிகரித்திருக்கிறது என்று பார்த்தால் பொருள்களின் மீது விதிக்கும் வரி அதிகரித்திருக்கிறது. மத்திய சர்க்கார் கொடுக்கும் தொகையும் 18 கோடியாக அதிகரித்திருக்கிறது என்று நிதி அமைச்சர் சந்தோஷப்படக்கூடிய முறையில் சொன்னார்கள். ஆனால் அது அவ்வளவு சந்தோஷத்தை எனக்கு அளிக்கவில்லை என்று நான் பணிவோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஏனென்றால் மத்திய சர்க்கார் கொடுக்கக்கூடிய வரையிலே 6 கோடியிலிருந்து 8 கோடியாகத்தான் இன்கம் டாக்ஸ் உயர்ந்திருக்கிறது. அந்த சதவிகிதத்தில்தான் நமக்கு கிடைக்க வேண்டிய பங்கு கிடைத்திருக்கிறது. ஆனால் இன்றைக்கு மத்திய சர்க்காருக்கு அதிகமாக வருமானம் கிடைக்கிறது. நம்மைப் பொறுத்த வரையில் தொகை 18 கோடியாக ஆகியிருக்கிறது. ஆனால் அவர்களிடமிருந்து கிடைக்கக்கூடியதோ 6 கோடியிலிருந்து 8 கோடியாகத் தான் உயர்ந்திருக்கிறது. மற்ற இனங்களை எடுத்துப் பார்ப்போமானால், நமக்கு நியாயமாக வசூலிக்க வேண்டிய தொகை அதிக அளவில் வர வேண்டியிருக்கிறது. எக்சைஸ்-யை எடுத்துக்கொண்டால், நமக்கு கிடைக்க வேண்டிய தொகையிலே வித்தியாசம் காணப்படுகிறது. ஒரு வேளை ரயில்வேயையும் சேர்த்து 96 கோடி என்று நமக்கு விவரம் கொடுத்திருக்கிறார்களோ, என்னவோ. நான் சொல்வதிலே ஏதாவது தவறு இருந்தால், அதைத் திருத்திக் கொள்வதற்கு தயாராக இருக்கிறேன். நான் சுட்டிக்காட்ட விரும்புவதெல்லாம், இந்தியா பூராவும் ஒரே நாடு என்று சொல்லும்போது, இந்தியா பூராவிலும் பொருளாதார ரீதியிலேயும் அதேமாதிரி பார்க்க வேண்டுமென்பது தான். நம்முடைய ராஜ்யம் மட்டும் ஒன்று என்று பார்க்க வேண்டியதில்லை. இந்தியாவிலுள்ள வேறு எந்த ராஜ்யத்திலே எது வந்தாலும் அது நம்முடைய ராஜ்யத்தையும் பாதிக்கக்கூடியது. ராஜ்ய சர்க்கார் 100 கோடிக்கு திட்டம் போட்டிருக்கிறோம், நன்றாக இதுவரை செலவழித்திருக்கிறோம், திறமையாக செலவழிக்க இன்னும் திட்டங்கள் போட்டிருக்கிறோம், துண்டு விழவில்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறுவதை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது சந்தோஷம் அடையலாம். துண்டு விழாமல் சாதித்திருக்கிறேன் என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். இது எப்படி முடிந்தது என்று பார்க்கும்போது, இந்த அளவிற்கு மக்கள் அதிகமாக வரி கொடுத்திருக்கிறார்கள், 32 கோடியிலிருந்து 44 கோடி அளவுக்கு மக்கள் தான் அதிகமாக வரி கொடுத்திருக்கிறார்கள் என்று தான் தெரிகிறது. தவிர நிர்வாகச் செலவை எடுத்தால் மற்ற

10-30 a.m.

ராஜ்யங்களைப் பார்க்கும்போது, இங்கு மிகவும் குறைவாகவே இருக்கிறது. அப்போது யார் இந்த ரெவின்யூ டெபிசிட்டுக்குக் காரணம்? நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்கு, மற்ற ராஜ்யங்களிலே உள்ளது போல் அல்லது மத்திய சர்க்காரிலே கொடுக்கக்கூடிய அளவுக்கு சம்பள உயர்வோ அல்லது அலவன்சோ கொடுக்கப்படுகிறதா? அங்குள்ளதுபோல் நம்முடைய சர்க்கார் ஊழியர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் சம்பளம் கொடுத்துவிட்டு, ரெவின்யூ டெபிசிட் இல்லை என்று சொன்னால், அதை ஓரளவுக்கு புரிந்துகொள்ள முடியும். அப்போது யார் இந்த ரெவின்யூ டெபிசிட்டைச் சுமக்கிறார்கள்? சர்க்கார் ஊழியர்கள் இந்தச் சுமையைச் சுமக்கிறார்கள். மக்கள் அதிகமாக வரி கொடுத்திருக்கிறார்கள். ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது, இந்தப் பெரும் சுமையை நம்முடைய ராஜ்யத்திலே உள்ள நிர்வாக இயந்திரத்தை இயக்கக்கூடிய ஊழியர்கள்தான் பெருமளவுக்கு தாங்கிக்கொண்டு வருகிறார்கள். ஆகையினாலே மத்திய சர்க்கார் நமக்கு கொடுக்க வேண்டியதை பெறுவதிலே தான் நாம் அதிகமாகக் கவனத்தை செலுத்தவேண்டும். அங்கிருந்து என்னென்ன வாங்க வேண்டும், எந்த அளவுக்கு வாங்குவதற்கு நமக்கு அதிகாரம் இருக்கிறது என்பதிலேதான் நாம் கவனம் செலுத்த வேண்டும். அந்த வகையிலே கடந்த 10 ஆண்டுகளிலே நமது அமைச்சர் அவர்கள் எந்த அளவுக்கு பெற்றிருக்கிறார்கள் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். வரிகள் போடுவதிலே அல்லாது வேறு எந்த வகையிலே வருமானம் விருத்தி அடைந்திருக்கிறது? வேண்டுமானால் எடுத்துப் பார்க்கட்டும். ஏற்கனவே இருந்ததை விட, இந்த 10 வருஷ காலத்திலே என்னென்ன புதிய வாய்ப்புக்கள் செய்திருக்கிறார்கள்? காட்டிலாகா போன்ற மற்ற இலாகாக்களின் மூலம் எந்த அளவுக்கு அரசாங்கத்தின் வருமானம் தனிப்பட்ட வகையிலே உயர்ந்திருக்கிறது என்பதை எடுத்துப் பார்க்கட்டும். இன்றைக்கு கொஞ்சம் வருமானம் வந்தாலும்கூட, அவைகளை அந்தத் துறையின் வரத்து. அது ஓரளவுக்கு விருத்தியடைந்திருக்கிறது. இப்போது 20 லட்சம் வருகிறது, அது போதாது, இன்னும் அதிகமாக வேண்டுமென்று எதிர்க்கட்சித் தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் கேட்டார்கள். இன்னும் அதிக வருமானம் வந்தாலும்கூட, அவைகளை அந்தத் துறையின் விருத்திக்கு செலவழிக்க வேண்டும், அங்கு வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களுக்கு மேலும் அனுகூலங்களை அளித்து அவர்களுக்கு மேலும் பல சலுகைகளை அளிக்க வேண்டுமென்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். தனியார் துறையிலே இருப்பதை விட, அரசாங்கத் துறையிலே வருமானம் அதிகம் வந்துகொண்டிருக்கிறது. ஆகவே, இன்னும் அபிவிருத்தி ஆகாதவைகளை அபிவிருத்தி செய்ய முடியும். இது ஒன்று தவிர, புதிய இனங்கள் வேறு எதுவும் கிடையாது, பழயவைதான் அப்படியே இருக்கிறது. ஆகவே, மேலும் வருமானத்தை விருத்தி செய்வதற்கு என்னென்ன நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டார்கள் என்பதை நிதி அமைச்சர் அவர்கள் விளக்கியிருப்பார்களேயானால், கடந்த 10 வருஷ காலத்திலே முன்னேற்றமான திட்டங்களை வைத்து, மக்கள் மீது வரிச் சுமை விழாமல்,

15th December 1961] [Sri M. Kalyanasundaram]

இந்த அரசாங்கம் மேலும் அவர்கள்மீது வரியைப் போடாமல், மத்திய சர்க்காரிலே இருந்து நமக்கு கிடைக்கவேண்டிய இனங்கள் என்னென்ன, அவைகளைப் பெற்று விட்டோமா என்பதையெல்லாம் விளக்கி இருப்பார்களானால், அது மிகவும் திருப்திகரமாக இருக்கும். அப்போது நானும் சேர்ந்து பாராட்டி இருப்பேன். தவிர, இன்றையதினம் மூன்ருவது பைனன்ஸ் கமிஷன் அறிக்கை சமர்ப்பித்திருப்பதாகப் பத்திரிகையிலே பார்த்தேன். அது வெளிவந்த பிறகு, புதிய சட்டசபையிலே நாம் அதைப்பற்றி விவாதிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கலாம். ஆனல் அப்போது நமது நிதி அமைச்சர் அவர்கள் இங்கு இருக்க மாட்டார்களே என்பதுதான் ஒரு குறையாக இருக்கிறது. இருந்தாலும் அப்போது அவர்கள் வேறு இடத்தில் நிச்சயமாக இருப்பார்கள் என்று நம்புகிறேன். நமக்கு உதவி செய்யக்கூடிய முறையிலே மூன்ருவது நிதிக் கமிஷன் செய்யவேண்டிய சிபாரிசுகள், நம்முடைய ராஜ்யத்திலே இந்த மாதிரி வரி அதிகரித்துக் கொண்டு போவதையும், அரசாங்க ஊழியர்களின் சம்பளம் குறைவாக இருப்பதையும் ஆகிய இந்த இரண்டையும் கணக்கில் எடுத்துக் கொண்டு, நம்முடைய நிதி நிலைமையை விருத்தி செய்வதற்கு எந்த அளவுக்கு மற்றத் துறைகளிலே கிடைக்க வேண்டிய பங்கு ஆகியவைகளிலே மிகவும் கவனம் செலுத்த வேண்டியது ரொம்பவும் அவசியம் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயமாகும். இது இன்னும் தொடர்ந்து பின்பற்ற வேண்டிய விஷயமாக இருந்தாலும் கூட, இன்று இந்த சந்தர்ப்பத்தில் இதைக் குறிப்பிட வேண்டியிருக்கிறது என்பதற்காக நான் இதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

இன்னெரு முக்கியமான விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். கடந்த 10 ஆண்டு காலத்திலே உள்ள விருப்பு வெறுப்பினையெல்லாம் மறந்து இதைப் பேசுகிறேனே தவிர, ஏதோ என்னுடைய திட்டங்களை, கொள்கைகளை வைத்துக் கொண்டு, அந்த அடிப்படையிலே பேசுகிறேன் என்று நினைக்க வேண்டாம். 100 கோடி அளவுக்கு நாம் இப்போது அபிவிருத்தி அடைந்திருக்கிறோம் என்று சொன்னர்கள். இப்படி உயர்ந்திருப்பதால், ஜனங்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறதா? ஜனங்களிடத்திலே எந்த அளவுக்கு பண்பாடுகளை அபிவிருத்தி செய்திருக்கிருர்கள்? கடந்த 10 வருஷ காலமாக ஒரே கட்சி அரசியலிலே ஏகபோகமாக அதிகாரத்தில் இருந்து, நாட்டிலே அநேகமாக அமைதி இருந்திருக்கிறது, ஏதோ சிற்சில சமயங்களிலே ஆர்பாட்டங்கள் இருந்ததே தவிர, மற்றபடி பெரும்பாலும் மக்கள் தங்கள் ஒத்துழைப்பைக் கொடுத்திருக்கிருர்கள், அமைதி இருந்திருக்கிறது, உற்பத்தியிலே தொழிலாளர்கள் போதுமான அளவுக்கு தங்கள் ஒத்துழைப்பைத் தந்திருக்கிருர்கள், அப்படியிருந்தும் ஜனங்களுடைய வாழ்க்கைத் தரம் எந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்பதை நாம் முக்கியமாக கவனித்துப் பார்க்க வேண்டும். எந்த அளவுக்கு வரி சுமையைத் தாங்க முடியுமோ அந்த அளவுக்கு வரி போடப்பட்டிருப்பதைத்தான் நாம் இன்றையதினம் பார்க்கின்றோம். இதை கனம் அமைச்சர் அவர்களும் ஒப்புக்கொள்ளத்தான்

[Sri M. Kalyanasundaram] [15th December 1961

வேண்டும். தனி நபர் வருமானம் பெருகியிருக்கிறதா என்று பார்த்தால், 1 சத விகிதம் அளவுக்குத் தான் உயர்ந்திருக்கிறது. அதிலும் நம் ராஜ்யம் பின் தங்கிய நிலையில்தான் இருக்கிறது. ஆகவே, தனி நபர் வருமானம் கூட பெருகவில்லை. அப்படியிருக்க, இந்த பட்ஜெட்டினுடைய புள்ளிவிவரத்தை பார்த்து மட்டும் நம்முடைய அரசாங்கம் பெருமளவுக்கு சாதனைகள் புரிந்திருக்கிறது என்று நாம் மகிழ்ச்சியடைய வேண்டுமென்று சொன்னால், எப்படி முடியுமென்பதை சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். நமது நிதி மந்திரி அவர்கள் ஓர் சிறந்த அறிவாளி. அவர்களைப் பற்றி நான் குறை கூறவில்லை. இப்படி நாம் போடக்கூடிய திட்டங்கள் எல்லாம் நல்ல முறையிலே செலவிடப்பட்டு, நல்ல முறையிலே நிறைவேற்றப்பட்டும், நாட்டிலே ஏன் இந்த குறை ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் சிந்திக்காவிட்டால், நம் நாட்டுக்கு செய்ய வேண்டிய கடமையிலிருந்து தவறியவர்களாவோம் என்பதைத்தான் நான் இந்த நேரத்திலே குறிப்பிட விரும்புகிறேன். அதே சமயத்தில் நாட்டு மக்கள் என்ன பண்பாடுகளை எதிர்நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் கூற விரும்புகிறேன். வேறு ஒரு இடத்தில் பேசுகின்றபோது நமது நிதி மந்திரி அவர்கள் சொன்னதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். மக்களிடத்திலே நம்பிக்கை என்ற அர்த்தத்தில் பேசியிருப்பதாக பத்திரிகையிலே பார்த்தேன். ஆங்கிலத்தில் பேசியதை மொழி பெயர்த்து போட்டதிலே இப்படி நம்பிக்கை என்று போட்டிருக்கிறார்கள் என்று நான் நினைக்கிறேன். அது லட்சியம் என்று இருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். மக்களிடத்திலே லட்சியம் இருக்கவேண்டுமென்று அவர்கள் ஆர்வத்தோடு குறிப்பிட்டிருக்கிறார்கள். என்ன லட்சியம் அது? காங்கிரஸ் கட்சிக்கு அரசியல் ரீதியிலே சோஷலிஸ சமுதாயபாணி என்பதை லட்சியமாக வைத்திருக்கிறார்கள். அதேபோல் பார்லிமெண்டிலும் சோஷலிஷ சமுதாயபாணி என்பதை லட்சியமாக வைத்திருக்கிறார்கள். இது என்ன லட்சியம் என்பது தான் தெளிவாக விளங்கவில்லை. இது எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். இதனால் மக்களை நாம் உற்சாகப்படுத்தி விட முடியுமா? இன்றைக்கு நாட்டிலே என்னென்ன குறைகள் இருக்கின்றன, அவைகளை எப்படி எப்படி போக்க வேண்டுமென்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஏழைகள், தொழிலாளர்கள், விவசாயிகள் முன்னேறியிருக்கிறார்களா? மற்றபடி, முதலாளிகள், நிலப்பிரபுக்கள் முன்னேறியிருக்கிறார்களா என்பதில் கவனம் செலுத்தி, இன்றைய தினம் நாட்டிலே திட்டங்களின் பலனை அனுபவித்தவர்கள் யார் என்ற கேள்விக்கு பதில் சொன்னால்தான் நாட்டிலே உள்ள மக்கள் திருப்தி அடைவார்கள் என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

விலைவாசிக் கொள்கையிலே நம்முடைய அரசாங்கமும் ஒரு பெரிய தவறு செய்திருக்கிறது. இந்த அரசாங்கம் தனியாக என்ன நடவடிக்கை எடுக்க முடியும் என்று நினைக்கலாம். உள்துறை அமைச்சர் அவர்கள் ஒரு சமயம் பேசும்பொழுது ராஜ்ய சர்க்கார் செய்யக்கூடிய வேலை அல்ல இது, மத்திய

15th December 1961] [Sri M. Kalyanasundaram]

சர்க்கார் செய்யக்கூடிய வேலை என்று சொன்னார்கள். ராஜ்ய சர்க்கார் மூலம் சுட்டிக்காட்டவேண்டிய பொறுப்பு இருக்கிறது. அதே சமயத்தில் நாஷனல் டெவலப்மென்டு கவுன்சிலில் இந்தப் பிரச்சனை திரும்பத் திரும்ப விவாதிக்கப்பட்டு, அத்தியா வசியமான பண்டங்களை அரசாங்கம் நேரடியாக வியாபா ரம் செய்யவேண்டும் என்று திட்டம் வகுத்து காட்டி யிருக்கிறார்கள். அந்தத் துறையில் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்? மக்களுடைய வாழ்க்கைக்கு அவசிய மான பொருள்களை நிலையான விலையில் கொடுப்பதற்கு நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் என்று சொல்லி திருப்தி அளித் திருந்தால் நானும் பாராட்டு மாலை நிச்சயமாக போடுவதற்கு தயாராக இருக்கிறேன். அந்தத் துறையிலே பெரிய அளவுககு துண்டு விழுகிறது என்ற குறையை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். முகஸ்துதிக்காக பேசவேண்டுமென்றால் பேசலாம், ஆனால் அந்த மாதிரி பேசுவது உண்மையாகாது என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஜனங்களுக்கு வீட்டு வாடகை உயர்ந்திருக் கிறது. அத்தியாவசியமான பண்டங்களின் விலைவாசி உயர்ந்திருக் கிறது, தரம் குறைந்திருக்கிறது. ஒரு கேள்விக்கு பதில் சொல்லக் கூடிய சமயத்தில் மராமத்து அமைச்சர் அவர்கள் சிமென்டு வினியோகம் பற்றி குறிப்பிட்டு ஏதாவது குறையை சுட்டிக் காட்டினால், நான் நடவடிக்கை எடுக்கிறேன் என்று சொன்னார். அவர் மந்திரி என்று வெளியில் சொல்லாமல் ஒரு ஆளை அனுப் பட்டும். ஐந்து மூட்டை சிமென்டு வாங்கிவிட்டும். நான் வேண்டு மானாலும் கையில் பணம் தருகிறேன். ஒரு பர்செண்ட் ரிலீஸ் பண்ணியிருக்கிறார்கள். மந்திரி அவர்கள் சொந்த உபயோகத்திற்கு சிமென்டு வாங்கியதில்லை என்று நினைக்கிறேன். 12 ரூபாய்க்கு ஒரு மூட்டை வாங்க முடியாது, அரிசி மில்களில் எல்லாம் ஒரு மண்ணைக் கொண்டு வந்து அரைத்து அதை சிமென்டோடு கலப் பதற்கு உபயோகப்படுத்துகிறார்கள். அந்த அளவுக்கு கலப்படம் இன்று எல்லாத் தொழில்களிலும் வந்துவிட்டது. இதை ஏன் நாம் தடுக்க முடியவில்லை? அரசியல் கட்சி செல்வாக்குக்கு வேண்டி இப் பேர்ப்பட்டவர்களின் உதவியை நாடுவதினால்தான், நிதி அமைச்சர் அவர்களும், மராமத்து இலாகா அமைச்சர் அவர்களும், மற்ற அமைச்சர்களும் எவ்வளவு பாடுபட்டாலும் சரி, இதை தடுக்க முடியவில்லை. உங்களுடைய கட்சிக்கு ஆதரவு கொடுக்கக் கூடியவர்கள், செல்வாக்கு கொடுக்கக் கூடியவர்கள் தான் இதற்கு முக்கிய காரணமாக இருக்கக்கூடியவர்கள். உங்களுடைய திட்டங்களைப் பற்றி வாயளவிலே பேசினாலும் கூட அந்தத் திட்டங்களுக்கு ஊறு விளைவிக்கக்கூடிய சக்தி உங்களுக்கு பக்க பலமாக இருக்கிறது, அந்த சக்தியை உதரித் தள்ளக்கூடிய மனோபாவம் என்றைக்கு வருகிறதோ, அன்றைக்குத் தான் சொன்ன திட்டப்படி, சொன்ன வாக்குறுதியை நிறைவேற்றுகிற வகையில், பணியாற்றி மக்களுடைய ஆசீர்வாதத்தைப் பெற முடியும் என்பது என்னுடைய நம்பிக்கை. இதைப்பற்றி இன்னும் விவரமாக பேசிக்கொண்டே போவதற்கு இது சமயம் அல்ல. ஒரு பெரிய குறைபாடு இருக்கத்தான் இருக்

கிறது. இந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நாம் பரிசிலனை பண்ணும்பொழுது, 10 ஆண்டு காலமாக நிதி அமைச்சர் அவர்கள் ஏகபோக ஆட்சியில் இருந்த காலத்தில் இந்தக் குறைகள் இருக்கத்தான் செய்கின்றன என்பதைப் பற்றி நான் வருத்தப் படுகிறேன். மற்றபடி 100 கோடி ரூபாய்க்கு பட்ஜெட் போடு கிறோம் என்று சொன்னாலும்கூட அந்த சந்தோஷத்தில் நான் பரி பூரணமாக பங்கு எடுத்துக்கொள்ள முடியவில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நானும் இந்தச் சபையிலே 10 வருஷ காலமாக தொடர்ந்து என் சக்திக்கும், ஆற்றலுக்கும் ஏற்ப பணிபுரிந்து வந்திருக்கிறேன். என் உடல் நலம் இன்னும் நல்ல திடகாத்திரமாக இருந்தால், இன்னும் அதிகமாக வேலை செய்திருக்க முடியும் என்பது என்னுடைய நம்பிக்கை. நான் எவ்வளவு இந்த சபையில் பங்கு எடுத்துக்கொண்டிருந்தாலும், அந்த கௌரவம் எனக்கு மட்டும் அல்ல, என்னுடைய கட்சிக்கும் உண்டு. எனக்கு இந்த அளவுக்கு மன உறுதியையும், கொள்கைத் தெளிவையும் அளித்து, எந்த இடத்தில் எதிர்க்க வேண்டுமோ அதை எதிர்க்கவும், எந்த இடத்தில் நல்லது இருந்தால் அதை ஆதரிக்கவேண்டுமோ ஆதரிக்கவும் எனக்கு அரசியல் தெளிவு ஏற்படுத்திக் கொடுத்தது என்னுடைய கட்சியும், என்னுடைய கட்சிக் கொள்கையும். என் னுடைய கட்சியிலிருந்து என்னைப் பிரிக்க முடியாது. என்னிட மிருந்து என்னுடைய கட்சியைப் பிரிக்க முடியாது. என்னுடைய கட்சிக் கொள்கையை நான் வழிகாட்டியாக வைத்துக்கொண்டு தான் இந்தச் சபையில் பணிபுரிந்திருக்கிறேன். நான் என்னுடைய கட்சிக் கொள்கையை எந்த அளவுக்கும் விட்டுக் கொடுத்ததில்லை. எனது கட்சிக் கொள்கையை மனப் பூர்வமாக நிறைவேற்றியிருக் கிறேன் இந்தச் சபையில். அதே சமயத்தில் கட்சி வெறியினால் மட் டும் எந்தப் பிரச்சனையையும் அணுகியதில்லை என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். அதே போன்று இந்தச் சபையிலே 10 வருஷ காலமாக தொடர்ந்து பணி ஆற்றியிருக்கிறார்கள் நிதி அமைச்சர் அவர்கள். நிதி அமைச்சராக மட்டும் அல்ல, கட்சித் தலைவராகவும் இருந்து இந்தச் சபைக்கு வழிகாட்டி, சில சமயங் களில் ஏதாவது சந்தர்ப்பங்கள் காரணமாக குரோதம் வளரக் கூடிய நேரத்தில், அதைச் சமாளித்து தவிர்க்கவேண்டும் என்பதில் அக்கரை கொண்டு, அதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்திருக் கிறார்கள். அதற்கு உதாரணமாக இன்று காலையிலே கூட உரிமைப் பிரச்சனை விஷயத்திலே அவர் நடந்துகொண்டார். அவர் ஒரு தீர்மானம் கொண்டு வந்திருந்தால், நானும் அதற்கு ஒரு திருத்தத்தை கொண்டு வந்திருப்பேன். அப்பொழுது விவாதத்தில் பேசும்போது ஏதாவது சூடு ஏறலாம். அதிலே இருக்கக்கூடிய நியாயத்தை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள் என்று தான் நினைக்கிறேன். நாம் வெவ்வேறு அரசியல் கட்சியைச் சார்ந்த வர்களாக இருப்பதால் காங்கிரஸ் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம் என்றெல்லாம் இருப்பதால் அரசியல் விருப்பு, வெறுப்பு இருக்கத்தான் செய்யும். எந்தப் பிரச் சனையும் அரசியல் விருப்பு வெறுப்பிற்கு அப்பாற்பட்டு பார்க்க வேண்டுமென்றாலும்கூட, அரசியல் விருப்பு, வெறுப்பு நம்மிடையே

15th December 1961] [Sri M. Kalyanasundaram]

இருக்கத்தான் செய்யும். உதாரணமாக இந்த மறியலை விவசாய சங்கமும், கம்யூனிஸ்டு கட்சியும் சேர்ந்து நடத்தினார்கள், அது காங்கிரஸ்காரர்களுக்கு பிடிக்கவில்லை, எதிர்க்கிறார்கள். காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களும் உரிமைக் கமிட்டியில் இருக்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது, உரிமைப் பிரச்சனையைக் கவனிக்கும் நேரத்தில், விருப்பு, வெறுப்புக்கு இடம் கொடுக்காமல் ஒரு முடிவுக்கு வர முடியுமா? நான் ஏதோ முரட்டுத்தனமாக பேச வேண்டும் என்ற எண்ணத்தோடு பேசவில்லை. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் இந்த மறியலுக்கு எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார்கள், பொதுக்கூட்டத்தில்கூட எதிர்த்து பேசியிருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது 'உள் துறை அமைச்சர் அவர்களை நீங்கள் மட்டும் உரிமைக் கமிட்டியில் இருக்கலாமா' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் என்ன யோசனை கூறினார்கள் என்று சொன்னால், நடவடிக்கைகளைப் பார்த்தால் தெரியும் அவர்கள் சொன்னார்கள் 'கலியாணசுந்தரம் இருக்கட்டும். சினிவாச ஐயர் அவர்கள் சொல்ல வேண்டிய வாக்கு மூலத்தை கொடுக்கட்டும், அதற்குப் பிறகு பார்த்துக்கொள்ளலாம்' என்று சொன்னார். அதற்கும் ஒத்துக்கொண்டேன். முரட்டுத்தனமாக ஒன்றும் சொல்லவில்லை. நான் எந்த முடிவும் எடுக்கப்பட முடியாத நிலையை ஏற்படுத்தவேண்டும் என்ற எண்ணத்தில் இருந்தவன் அல்ல. நாம் அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள். ஒரு கட்சி, இன்னொரு கட்சியை மடக்க வேண்டும் என்ற எண்ணம் வரத்தான் செய்யும், சந்தர்ப்பம் கிடைத்தால் இன்னொரு கட்சியை அம்பலப்படுத்த வேண்டும் என்று நினைக்கலாம். அப்படி செயல்படும்பொழுது அதிலே சில சங்கடங்கள் ஏற்படலாம் என்பது உண்மை. இருந்தாலும் அந்த சங்கடம் அதிகமாக குரோதமாக வளர்ந்து, விகாரமான சம்பவம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுவதுதான் விவேகம். அந்த விவேகத்தை இந்தச் சபையிலே எல்லாக் கட்சியினரும் பின்பற்றியிருக்கிறோம் இந்த 10 வருஷ காலத்தில். அதுவும் குறிப்பாக சென்ற ஐந்து வருஷ காலத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சபையில் இடம் பெற்று, அவர்கள் தீவிரமான மாறுபட்ட கருத்துக்கள் உடையவர்களாக இருந்தாலும், அவர்களும் இந்தச் சபையின் காரியத்தை காப்பாற்றக்கூடிய முறையில் நடந்து கொண்டிருக்கிறார்கள், எல்லோரும் அவ்வாறு நடந்து கொண்டிருக்கிறோம் என்பது நாம் எல்லாக் கட்சியினரும் பாராட்டிக்கொள்ளக்கூடிய ஒரு நிகழ்ச்சி. அதிலும் குறிப்பாக நிதி அமைச்சர் அவர்கள் பங்கு கொண்டு ஒத்துழைத்திருக்கிறார்கள். நிதி அமைச்சர் அவர்கள் கொஞ்சம் முன் கோபமும் முரட்டு பிடிவாதமும் உடையவர். இந்த 10 வருஷ காலத்தில் நாங்கள் இருவரும் நெருங்கி பழகிவிட்டோம். அவர் ஒரு மாற்றுக் கட்சியைச் சேர்ந்தவர், நான் இன்னொரு கட்சியைச் சேர்ந்தவன் என்ற எண்ணம் கூட சில சமயங்களில் ஏற்படுவதே இல்லை. ஆனால் ஒரு விஷயம். அவரிடத்திலே நான் இதுவரையிலும் ஒரு காரியத்தையும் சாதித்துக்கொண்டது கிடையாது. நான் என்ன எழுதினாலும், அதற்கு விரோதமாகத்தான் அவர் உத்தரவு இருக்கும். உள் துறை அமைச்சராவது நான் ஏதாவது எழுதினால், உடனே பதில் வரும், இல்லை என்றாவது பதில் வரும்.

நிதி அமைச்சர் அவர்களும் கலியாணசுந்தரமும் நண்பர்கள் என்று நினைக்கக்கூடியவர்கள் நினைக்கலாம். எந்தக் கடிதத்தை எடுத்தாலும் பாருங்கள், அதிலே அரசியல் சூட்சமம் நிறைய உண்டு. அதை எவ்வளவு விதமாக உபயோகப்படுத்த முடியுமோ, அந்த விதத்தில் உபயோகப்படுத்துவார்கள். அவரிடத்திலிருந்தும் சரி, அவருடைய நிர்வாகத்தில் இருக்கக்கூடிய இலாகாக்களில் இருந்தும் சரி, நான் எழுதிய 'ரெப்ரஸென்டேஷன்களுக்கு' 10 வருஷ காலத்தில் ஒரு சாதகமான பதிலும் பெற்றதில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். அப்படியிருந்தும் அவரிடத்தில் அதற்காக எனக்கு விரோதம் கிடையாது. நான் அந்த இடத்தில் இருந்தால் எப்படிச் செய்யவேண்டும் என்பதை எனக்கு பழக்கிக் கொடுக்கிறார். அவர்களிடம் பல விஷயங்களை நான் தெரிந்து கொண்டிருக்கிறேன். அந்த இடத்தில் நான் இல்லாவிட்டாலும், அங்கே இருந்தால் எப்படி வேலை செய்யவேண்டும், அரசியல் சாகசம் எப்படி இருக்கவேண்டும் என்பதை நான் அவர்கள் மூலம் தெரிந்து கொண்டிருக்கிறேன். அவர்களுடைய திறமையினால் எதிரிகளைமுறியடிக்கக்கூடிய முறையில் அரசியல் சாகசம் இருக்க வேண்டும் என்பதை அவர்களிடமிருந்து நான் பழகிக்கொண்டிருக்கிறேன். பிறரிடமிருந்து விஷயங்களை கற்றுக்கொள்ளவேண்டும் என்பது தான் என்னுடைய எண்ணம். நான் அவர்களிடம் பல விஷயங்களை கற்றுக்கொண்டிருக்கிறேன். அவர்களை இந்தச் சபையில் மூன்று நாட்களாக பார்க்கும்பொழுது ரொம்பவும் சிரித்த முகத்துடன் நிதானமாக இருக்கிறார். இதுமாதிரி எப்பொழுதும் இருக்கவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அவர் வேறு எந்த இடத்திற்குப் போனாலும், நான் முன்னாலேயே இதைச் சுட்டிக் காட்டியபோது 'கலியாணசுந்தரம் வயதில் பெரியவராக இருந்தாலும் சரி, சிறியவராக இருந்தாலும் சரி, அவர் சொன்ன புத்திமதியை ஏற்றுக்கொள்ளுகிறேன்' என்று சொன்னார். 1952-ல் அவர் இந்தச் சபையில் வந்து உட்கார்ந்தவுடன் பார்த்தவர்கள் இப்பொழுது அவரை ரொம்ப பசு என்றுதான் சொல்வார்கள். அந்தக் காலத்தில் ஒரு முரட்டுச் சுபாவம் இருந்தது. 10 வருஷத்தில் நிதானம் வந்துவிட்டது. அந்தக் காலத்தில் இருந்த முறுக்கினால், புதியதாக வந்தபொழுது உற்சாகத்தில், தான் பேசக் கூடிய விஷயத்தில் இருக்கக்கூடிய நம்பிக்கையினால் அவர் அப்படி பேசியிருக்கலாம், செய்திருக்கலாம். அது ஓரளவுக்கு பலஹீனம் என்று நான் நினைக்கிறேன். அதையும் திருத்திக்கொள்வதற்கு முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார் என்பதைப் பார்க்கும்பொழுது, எங்கு சென்றாலும், எந்தச் சூழ்நிலையிலும் திறமையுடன் சமாளித்துக்கொள்ளுவார் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அரசியல் ரீதியாக நான் மாறுபட்ட கருத்து உடையவனாக இருப்பதால் தனிப்பட்ட முறையில் அவருக்கு எந்தவித உதவியும் செய்ய முடியாதவனாய் இருக்கிறேன். அப்படியிருந்தும், தமிழ் நாட்டிற்கு ஒரு நல்ல பெயரை ஏற்படுத்திக்கொடுக்கக்கூடிய முறையில், அவர் எங்கும் பணி புரியவேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். அவர்கள் ஆங்கிலத்தையும், தமிழையும் வைத்துக் கொண்டு கொஞ்சம் சங்கடப்படுகிறார்கள். ஆங்கிலத்தை

15th December 1961] [Sri M. Kalyanasundaram]

அறவே விட்டுவிட முடியாது. அது தனிப்பட்ட விஷயம். தமிழை யும் விட்டுவிட முடியாது. தமிழுக்காக அவர்கள் எடுத்துக்கொண் டிருக்கிற முயற்சிகளைப் பாராட்ட வேண்டும், நிதி அமைச்சர் என்ற முறையிலே தமிழுக்கு உரிய அந்தஸ்து கொடுக்க வேண்டும் என்று சொல் அளவில் அல்ல, காரியத்தில் முயற்சி எடுத்தார், அந்த முயற்சியின் பயனாக, சென்னை சட்டசபை சென்ற முறை முடிகிற சமயத்தில், 1956 டிசம்பர் என்று நினைக்கிறேன், தமிழை ஆட்சி மொழியாகக் கொள்ளும் சட்டம் நிறைவேற்றப்பட்டு பிற் பாடு கலைந்தோம். அந்த சமயம் சட்டசபை சம்பிரதாயங்களை ஒதுக்கி வைத்து, கோஷங்கள்போட்டு, கை தட்டி ஆரவாரம் செய்து அப்படி முடிந்தது அந்தக் கூட்டம். இந்த ஐந்து வருஷத்தில் அதை நிறைவேற்றுவதில் பல முட்டுக் கட்டைகள் ஏற்பட்டிருக் கின்றன. தமிழ் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும் என்று முயற்சி எடுத்தாலும், அவர் சம்பந்தப்பட்ட வரையில், தமிழிலே பேசுவதையும் எழுதுவதையும் மனப்பூர்வமாகச் செய்து வந்திருக் கிறார்கள். சபையில் பேசும் சமயங்களில் தமிழிலும், ஆங்கிலத் திலும் வெகு திறமையாக எடுத்துச் சொல்ல முடிந்திருக்கிறது. தமிழ் வார்த்தைகளை எளிய முறையில் புரிந்துக் கொள்ளும் முறையில் தமிழில் ஆட்சி நடத்த முடியும் என்பதைக் காட்டுகிறது அவர்கள் முயற்சிகள். அதே சமயத்தில் எந்த அளவுக்கு முயற்சி கள் எடுக்க வேண்டுமோ காரியாம்சத்தில் அதைக் கொண்டுவர், அந்த அளவுக்கு நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் தவறி இருக்கிறது. ஆனால், அவரை குறை சொல்லவில்லை. அதற்கு நம் ராஜ்யத்தில் இருக்கும் நிலையும், மற்ற சூழ்நிலையும் மற்ற சக்தி களும், கல்வித் துறையில் இருக்கும் சக்திகளும் தமிழ்த் துறையில் எவ்வளவு உயரவேண்டுமோ அந்த அளவு உயர்வு ஏற்படவில்லை. இந்தக் குறையை அவர்களும் ஒப்புக்கொள்வார்கள் தனிப்பட்ட முறையில் என்று எண்ணுகிறேன். அந்த முறையில் அவர்களுடைய முயற்சிகளைப் பாராட்டும் சமயத்தில், அதில் ஏற்பட்டிருக்கும் குறைகளையும், தவறுகளையும் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

அமைச்சர்கள் எல்லோரையும் பற்றி நிறையப் பேசலாம். அடுத்தபடியாக நம் முதல் அமைச்சரைப் பற்றிச் சொல்லும் போது, அவர் சட்டசபையில் பேசி நமக்குத் தொந்தரவு கொடுப் பதில்லை. நம் விவகாரத்திற்கு வருவதில்லை. இதில் முதல் அமைச்சர் தலையிடாக் கொள்கையைக் கையாண்டு வந்திருக் கிறார்கள். உள் துறை அமைச்சர், மந்திரி சபையிலேயே 'ஸீனியர்' தொடர்ந்து எல்லா மந்திரிசபைகளிலும் இருந்து வந்திருக் கிறார்கள். 1937-லிருந்தே பார்லிமென்டரி செக்ரடரியாக இருந்து தொடர்பு கொண்டவர்கள். அவர்களும் நிர்வாகத்தை நடத்தும் ரகஸ்யத்தை நன்கு புரிந்து கொண்டவர்கள். கேள்விகளுக்குப் பதிலளிக்கும்போது, முயற்சி எடுத்து விவரங்களைச் சொல்வார்கள். (குறுக்கீடு) தனிப்பட்ட முறையில், சொந்த விஷயமாகவோ அல்லது உறவினர் விஷயமாகவோ நான் யாரிடமும் போனது கிடையாது. பொதுவான விஷயங்களுக்காக, கட்சியைச் சேர்ந்த வர்கள் காரியங்களுக்காக போயிருப்பேன். அல்வளவுதான்.

[Sri M. Kalyanasundaram] [15th December 1961

அடுத்தபடியாக வருவாய் துறை அமைச்சர். அவர் ஒரு ஆபத்தான பேர்வழி. அவரைப் பிடிக்க முடியாது. அரசியல் கருத்துக்களின் பேரிலோ தவறான எண்ணங்கள் என்றோ அவரிடம் கிடையாது. கேள்வி நேரத்தில் பார்த்தால், கேட்ட கேள்விகளுக்கு நேரிடையாக எதுவும் சொல்லாமல், தமாஷாகச் சொல்லி நம்மையும் சிரிக்க வைத்து, தானும் சிரித்து, பிரச்சினையே நமக்கு மறந்துவிடும் அளவுக்குச் சொல்லி முடிப்பார்கள். பல பிரச்சினைகளைப் பற்றிக் கேட்கவேண்டும் என்று நாம் எவ்வளவு கோபத்தோடு வந்தாலும், அவர்கள் கூறக்கூடிய பதில்களில் இருக்கும் தமாஷில் அதையே மறந்துவிடுவோம். அதற்குள் சபாநாயகர் வேறொருவரைக் கூப்பிட்டுவிடுவர். அந்தவகையில் முதல் இடத்தில் வைக்கவேண்டும் நம் வருவாய்துறை அமைச்சரை.

அடுத்தபடியாக நம் மராமத்து இலாகா அமைச்சர். அவர்களிடத்தில் மரியாதை உடையவன் நான். அவர்களுக்குக் கொடுத்திருக்கும் பொறுப்புகள் பெரும் பொறுப்புகள். அவைகளை அவர்கள் திறமையோடு, கஷ்டத்தோடு நிர்வகித்து இருப்பதைப் பாராட்டுகிறேன். நிதி அமைச்சர், தொழில் துறை அமைச்சர், உள்துறை அமைச்சர் இவர்களிடத்தில் பேசும்போது தாக்கிப் பேசவேண்டும் என்ற எண்ணம் வரும். ஆனால், இவர்களிடத்தில் அனுதாபந்தான் வரும். தாக்க வேண்டும் என்ற எண்ணமே வராது. ஆனால், அவர்களிடத்தில் இருக்கக் கூடிய பெரும் பலஹீனம் ஒன்றுதான். காங்கிரஸ் கட்சிக்காக எதையும் செய்யலாம் என்று எண்ணுபவர்கள். உள்ளதை உள்ளபடி பேசிவிடுவார்கள். நாம் மந்திரியாக இருப்பது நம் கட்சிக்காகத் தானே என்று நினைப்பவர். அதைப் பேசியும் விடுவார்கள். மனதில் இருப்பதைத் திறந்து பேசுவது ஆபத்து என்று எண்ணாதவர். அவ்வளவு வெளிப்படையாகப் பேசுவது ஆபத்து, பெரும் பொறுப்புகளை வகிக்கிறவர்களுக்கு. இந்த ஐந்தாண்டு காலத்தில் இந்தப் பெரும் பொறுப்புகளை பல கஷ்டங்களுக்கு இடையே, உடல் நலம் குன்றியும், அதைப் பாராட்டாமல், கவனித்து வந்திருக்கிறார்கள் என்பதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இலாகாக்களில் கட்சிக் கண்ணோக்கோடு பார்க்காமல் வேலை செய்தால் ரொம்ப நலமாக இருந்திருக்கும்.

நம் தொழில் துறை அமைச்சர் இப்பொழுது இங்கே இல்லை. இருந்திருந்தால் குறைகளை எடுத்துச் சொல்லி இருப்பேன். அவர்களுடைய படிப்பும், திறமையும் எல்லோருக்கும் தெரியும். ஜெயிலிலே எனக்கு அவரிடம் ரொம்பப் பழக்கம் உண்டு. அவரை கம்யூனிஸ்ட் கட்சிக்குள் கொண்டுவர முயற்சித்தவர்களில் நானும் ஒருவன். அவர்கள் கம்யூனிஸ்ட் லிடரேச்சர்களை ரொம்பப் படிப்பார்கள். லெனினிஸம் முதலிய கம்யூனிஸ்ட் சித்தாந்தங்களைப் படிப்பார். பிறகு அவர்கள் ஐ.என்.டி.யு.சி.க்குப் போனார். அதன் பிறகு காங்கிரஸ் லேபர் சப்-கமிட்டிக்குப் போனார், பிறகு அவரும் நானும் வேறு வேறு பாதையில் சென்று விட்டோம். நானும் அவரும் 1942-ல் ஒரே ஜெயிலிலே இருந்தோம்; நண்பர்களுக்குத்

15th December 1961] [Sri M. Kalyanasundaram]

தெரியும். அவர்கள் நேற்றுகூட யு.என்.ஓ. பற்றி வெகு விரிவாக, தெளிவாகப் பேசினுர்கள்; அதில் இந்திய அரசாங்கத்தின் நிலை பற்றியும் பேசினுர்கள். அவர்கள் துறை சம்பந்தப்பட்டவரை, தனியார் துறை விருத்தி அடைந்திருக்கும் அளவுக்கு பொதுத் துறை விருத்தி அடையவில்லை. தனியார் துறைக்கும், பொதுத் துறைக்கும் இருக்கும் கருத்து வித்தியாசங்கள் பற்றிப் பேச இதுவல்ல சந்தர்ப்பம். இருப்பினும், தொழில் வளர்ச்சிக்காக ராஜ்யத்தில் முயற்சி எடுத்து இருக்கிறுர்கள். அதில் தனியார் துறைக்கு அதிகம் ஒதுக்கப்படுகிறது என்பது உண்மை. அபிப்பி ராயம் சொல்ல வேண்டியதில்லை இப்பொழுது. கேள்விகளுக்குப் பதிலளிக்கும் போது, அவர்கள் கோபப்படுவதில்லை. பூர்ணமான பதிலும் கொடுப்பார்கள். தொழிற்சங்கப் பிரச்சினைகளுக்கும் அரசியல் கருத்து வித்தியாசங்களுக்கும் சம்பந்தம் ஏற்படுத்தி, துரதிர்ஷ்டவசமான நிகழ்ச்சிகள் இல்லாமல் இருந்தால், திருப்தி கரமாக இருந்திருக்கும். அடுத்தபடியாக நம்முடைய உதவி சபாநாயகர் அவர்களைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். 11 a.m. அவருடைய அதிர்ஷ்டம் என்னவென்றுல், ஒவ்வொரு தடவையும் சபை முடிகிற நேரத்திலே அவர்கள்தான் சட்டசபை யிலே இருப்பார்கள்—சபாநாயகராக இல்லாமல் இருந்தாலும். சென்ற சட்டசபை காலத்திலே ராஜ்யங்கள் பிரிவினையின் போது ஒரு புதிய சபாநாயகரை நாம் தேர்ந்தெடுக்க முடியவில்லை. அதற் காக நாம் மனவருத்தப்பட வேண்டியதில்லை. ஆனுல் அந்த முறைக் கும் இந்த முறைக்கும் வித்தியாசம் இருக்கிறது. இப்பொழுது சபா நாயகர் என்ற பெயரில்லாவிட்டாலும், சபாநாயகருக்கு உரிய சலுகைகளையாவது பெற்றிருக்கிறுர். ஆனுல் அப்பொழுது சபா நாயகருக்கு உரிய சலுகைகள் எதுவுமில்லாமல் பணிபுரிந்து வந்திருக்கிறுர். அவர் உதவி சபாநாயகராகவே இருப்பதினுல் ஒரு வேளை இப்படி இருக்குமோ என்று அச்சமாயிருக்கிறது. இந்த சமயத்தில் நாமெல்லோரும் காலம் சென்ற டாக்டர் பூ. கிருஷ்ணுராவ் அவர்கள் மறைந்ததைப்பற்றி வருந்துகிறேம். அவர்கள் இப்பொழுது நம்மிடையே இல்லாமல் இருப்பது ஒரு பெரிய மனக்குறையாகத்தான் இருக்கிறது. அவர்கள் இந்த ஐந்து ஆண்டுகளுக்கு பூரணமாக இல்லாமல் மறைந்துவிட்டார்கள் என்பது நமக்கு மிகுந்த வருத்தத்தைத் தருகிறது. நமது உதவி சபாநாயகர் அவர்களும், அவருடைய ஆற்றலுக்கு ஏற்றவாறு, பிரச்சினைகளை சமாளித்து இந்த சபையை நல்ல முறையிலே நடத்தி வந்திருக்கிறுர்கள் என்பதைப் பாராட்டுவதுடன், இன்னும் மற்ற அங்கத்தினர்களும்—எதிர்கட்சி அங்கத்தினர்களாக இருந் தாலும்சரி, ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்களாக இருந் தாலும்சரி—கூடியவரையில் நல்ல முறையில் ஒருவரோடு ஒருவர் மனிதத் தன்மையுடன் பழகி, அரசியல் விருப்பு வெறுப்புகளுக்கு இடம் கொடுக்காமல் பணியாற்றி வந்திருப்பது இந்த சபைக்கு ஒரு தனி கௌரவம் என்றே நான் கருதுகிறேன். அதே கௌர வத்தை அடுத்தத் தேர்தலுக்குப் பின்னர் இந்த சபைக்கு வருகிறவர்கள் நிலை நாட்டுவார்கள் என்று நான் நினைக்கிறேன்.

தேர்தல் காலத்தில் நமக்கு பல சங்கடங்கள் ஏற்படும். இங்கே பேசுகிற மாதிரி அமைச்சர்கள் வெளியிலே பேசமாட்டார்கள். ஆனால் என்னைப் பொறுத்த வரையில் இங்கே பேசுவதைத்தான் வெளியிலே பேசுகிறேன். வெளியிலே பேசுவதைத்தான் இங்கேயும் பேசுகிறேன். ஆனால் பொது மேடையில் பேசும்பொழுது வேண்டு மானால் அதிக விவரங்கள் கொடுப்பேன். கொள்கைக்கு கொள்கை மோதல் ஏற்படினும், அரசியலுக்கு அரசியல் மோதல் ஏற்படி னும், யார் பதவிக்கு வரவேண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிட்டு எல்லோரும் சேர்ந்து நம்முடைய நாடு முன்னேறவேண்டுமென் பதில் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRI K. N. PALANISAMI GOUNDER :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, சென்ற ஐந்தாண்டு காலமாக நாமெல்லோரும் இந்த சட்ட சபையிலே பணியாற்றி வருகிறோம். இன்றுதான் இந்த சபையின் கடைசிக் கூட்டமாக இருக்கிறது. இன்று வெள்ளிக் கிழமை. ஒரு நல்ல விசேஷமான நாளில்தான் நாம் இந்தக் கூட்டத்தை முடிக்கிறோம். முக்கியமாக சென்ற ஐந்தாண்டுகளிலே நல்ல பணியாற்றிய நமது அமைச்சர்கள் அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் அவர்கள் சென்ற ஐந்தாண்டு காலத்திலே ஏற்பட்ட சாதனைகளைப்பற்றி எடுத்துச் சொன்னார்கள். அதிலே உள்ள குறைகளைப்பற்றியும் சொன்னார்கள். ஆனால் நாம் பொது வாகப் பார்க்கும்பொழுது நல்ல பல காரியங்களை சாதித்திருக் கிறோம் என்பதில் சந்தேகமில்லை. முக்கியமாக இந்த ஐந்தாண்டு களிலே நிலச் சீர்திருத்தச் சட்டத்தை கொண்டுவந்திருக்கிறோம், கிராம பஞ்சாயத்துக்கள் அமைக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். இந்த இரண்டு காரியங்களும் மிகவும் முக்கியமான காரியங்கள் என்று சொல்லலாம். பின்னர் எத்தனையோ சட்டசபைகள் ஏற் பட்டாலும், இந்த இரண்டு காரியங்களும் தமிழ் நாட்டின் சரித் திரத்திலேயே பொறிக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. நாம் நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டு வந்ததில் விவசாயிகளுக்கு மட்டுமல்ல, எல்லோருக்குமே ஒரு திருப்தியும் மனதில் ஒரு சந்தோஷமும் ஏற்பட்டிருக்கிறது. நகரங்களில் உள்ள மக்களைப் போல் கிராமங்களில் உள்ள மக்களும் இப்பொழுது சௌகரிய மாகவே வாழ்கிறார்கள். கிராமங்களிலே பல நல்ல காரியங்களை நாம் செய்திருக்கிறோம். கிராமங்களிலே கல்வி வசதி, போக்கு வரத்து வசதி, வைத்திய வசதி முதலியவைகள் செய்து கொடுக்க பஞ்சாயத்து யூனியன்கள் மூலம் ஏற்பாடு செய்திருக்கிறோம். பஞ்சாயத்து முறையும் வெற்றிகரமாகவே நடந்து வருகிறது. அந்த வகையிலே நம்முடைய ராஜ்யத்திலே நாம் செய்துள்ள காரியங்கள் மற்ற ராஜ்யங்களுக்கெல்லாம் ஒரு வழி காட்டியாக இருக்கின்றன. சென்ற ஐந்தாண்டுகளிலே நம்முடைய ராஜ்யத் திலே பெரிய பெரிய திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறோம். குந்தா மின்சார திட்டத்திற்காக பல கோடிக் கணக்கான ரூபாய் செலவு செய்திருக்கிறோம். நெய்வேலி திட்டத்திற்கும் பல

15th December 1961] [Sri K. N. Palanisami Gounder]

கோடிக் கணக்கான ரூபாய் செலவு செய்து வெற்றிகரமாக நடந்து வருகிறது. பரம்பிக்குளம் திட்டத்தையும் நிறைவேற்றி வருகிறோம். நமது நாட்டின் வருவாயைக் காட்டிலும் அதிகமான அளவுக்கு வெளிநாடுகளிலிருந்து உதவி பெற்று நல்ல பல திட்டங்களை நாம் செய்து வருகிறோம். கல்வித் துறையை எடுத்துக் கொண்டால் இன்றைய தினம் நாம் பெருமளவுக்கு அதிலே முன்னேறியிருக்கிறோம். இன்றைய தினம் ஐந்நூறு மக்கள் ஜனத்தொகை கொண்ட கிராமங்களிலெல்லாம் பள்ளிக்கூடம் ஏற்படுத்தியிருக்கிறோம். மற்ற ராஜ்யங்களுக்கு வழிகாட்டும் முறையிலே பகல் உணவு திட்டத்தை வெற்றிகரமாக நடத்தி வருகிறோம். ஹரிஜனங்களுக்காக நல்ல பல திட்டங்கள் போட்டு அவர்களுக்கு விடுகள் கட்டி கொடுத்து வருகிறோம். நெசவாளர்களுக்கு பல நன்மைகளை செய்து வருகிறோம். ஆகவே நம்முடைய ராஜ்யத்தில் சென்ற ஐந்தாண்டு காலத்திலே பல நல்ல காரியங்களை செய்ததைப்பற்றி நாம் ஓரளவுக்கு பெருமைப் பட வேண்டியதாயிருக்கிறது.

மற்ற ராஜ்யங்களில் இருப்பதுபோல் நமது மந்திரி சபையில் கருத்து வேற்றுமை கிடையாது. சட்டசபையிலும் பாகுபாடில்லை. நம்முடைய ராஜ்யத்தில் நமது மதிப்பிற்குரிய திரு. காமராஜ் அவர்களுடைய தலைமையின் கீழ் இந்த சட்டசபை ஏற்பட்டு நமது மந்திரி சபையிலே, ஒருவிதமான மனஸ்தாபமும் இல்லாமல் இருப்பதற்கும் அங்கத்தினர்கள் நேர்மையாகவும் நியாயமாகவும் நடந்து கொள்வதற்கும் நமது முதல் அமைச்சர் அவர்களைப் பாராட்ட வேண்டும். அவர் ஒரு சிறந்த தியாகி. எல்லா மக்களுக்கும் நியாயம் கிடைக்க வேண்டும், மக்களுக்கு பல நல்ல பணிகளை செய்ய வேண்டும் என்ற முறையிலே நல்ல தொண்டு ஆற்றி வருகிறார்கள். செய்யவேண்டிய பணிகளை காலாகாலத்தில் செய்கிறார்கள். அவரை நாம் எல்லோரும் பாராட்ட வேண்டும். மத்திய அரசாங்கமும் மற்ற ராஜ்யங்களும் நமது சென்னை ராஜ்யத்தை பாராட்டுகிறார்கள். அந்த பாராட்டுக்குரியவர் நமது முதலமைச்சர் அவர்கள் என்பதை இந்த சட்டசபை கடைசி கூட்டத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக நமது நிதி அமைச்சரவர்களைப் பற்றி கனம் அங்கத்தினர் எம். கல்யாணசுந்தரம் அவர்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். அவர் என்னுடைய ஜில்லாவைச் சேர்ந்தவர் என்ற முறையிலே எனக்கு மிக்க மகிழ்ச்சி. எனது சமூகத்தைச் சேர்ந்தவர் என்ற காரணத்தினாலே அந்த பெருமையில் எனக்கும் பங்கு உண்டு. சென்ற ஐந்தாண்டுகளிலே அவர் மிகவும் நேர்மையாகவும் நியாயமாகவும் நடந்து எல்லாக் கட்சி அங்கத்தினர்களையும் நல்ல முறையில் நடத்திய பெருமை அவருக்கு உண்டு. ஆகவே நமது நிதி அமைச்சர் அவர்களை மிகவும் பாராட்டுகிறேன். உள்துறை இலாகா அமைச்சர் அவர்கள் தற்சமயம் இங்கே இல்லை. யார் போய் அவரைக் கேட்டாலும் அவர்களுக்கு வேண்டிய காரியத்தை செய்து கொடுக்கும் ஆற்றல் உடையவர். அவரையும்

நான் இந்த சந்தர்ப்பத்தில் பாராட்டுகிறேன். மற்ற அமைச்சர்கள் எல்லோருமே நல்ல முறையில், நல்ல பண்பாடுகளுடன் பணியாற்றி வந்திருக்கிறார்கள். ஆகவே நமது முதலமைச்சர் அவர்களையும், நிதி அமைச்சர் அவர்களையும், உள்துறை இலாகா அமைச்சர் அவர்களையும், மற்ற அமைச்சர்களையும் நான் பெரிதும் பாராட்டுகிறேன்.

இன்றையதினம் நமது சட்ட சபையில் சபாநாயகர் இல்லாவிட்டாலும் நமது மதிப்பிற்குறிய உதவி சபாநாயகர் நல்ல முறையில் இந்த சட்டசபையிலே பணியாற்றி வருகிறார்கள். அவர்கள் நல்ல பண்பாடுடையவர்கள். யாரிடத்திலும் கோபித்துக் கொள்ளாமல் அன்புடன் பழகுகிறார்கள். அடுத்த சட்டசபையில் அவர் சபாநாயகராக வருவதற்கு ஆண்டவன் ஆசீர்வதிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சென்ற ஐந்தாண்டுகளிலே இந்த சட்டசபையிலுள்ள அங்கத்தினர்கள் எல்லோரும் நல்ல முறையிலே மிகவும் பொறுப்புடன் நடந்து கொண்டதற்காக எனது நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன். நமது சட்டசபை காங்கிரஸ் கட்சி கொறடா திரு. பி. ஜி. கருத்திருமன் அவர்கள் சென்ற ஐந்தாண்டு காலமாக நல்ல பணியாற்றி வந்திருக்கிறார்கள். சிலர் அவர்களைப்பற்றி குறைகூறுவதும் உண்டு. சீக்கிரமாக சட்டசபையில் பேசுவதற்கு அனுமதி தரமாட்டார். பெயர் கொடுத்துவிட்டால் அந்த வரிசைப் பிரகாரம்தான் பெயரை கூப்பிட வேண்டும் என்ற கோட்பாடுடையவர். கட்சியின் கோட்பாடுகளுக்குட்பட்டு நல்ல முறையில் பணியாற்றிய அவர் எங்கள் ஜில்லாவை சேர்ந்தவர். சென்ற ஐந்தாண்டுகளிலே இந்த சட்டசபை நல்ல முறையில் நடப்பதற்கு அவர் பெரிதும் உதவியாய் இருந்திருக்கிறார். அவருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இந்த சட்டசபை காரியதரிசி ஸ்ரீ டி. அனுமந்தப்பா அவர்களும், துணைக் காரியதரிசி ஸ்ரீ அளகிரிசாமி அவர்களும், உதவிக் காரியதரிசி ஸ்ரீ அமிர்தலிங்கம் அவர்களும் நல்ல முறையிலே பணியாற்றி அங்கத்தினர்களுக்கு அப்போதைக்கப்போது வேண்டிய உதவியை செய்து வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மேலும் எதிர்க்கட்சி தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியாரும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் ஸ்ரீ எம். கல்யாணசுந்தரமும், திரு. அண்ணாதுரை அவர்களும் திரு. சின்னதுரை அவர்களும் மற்றும் எல்லா அங்கத்தினர்களும் நல்ல முறையில் நடந்து நல்ல காரியங்களை செய்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் எனது பாராட்டுதலையும், நன்றியையும் தெரிவித்துக் கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI K. ANBAZHAGAN : சட்டமன்ற துணை தலைவர் அவர்களே, இந்த சட்ட மன்றத்தினுடைய இறுதி நாளாகிய இறுதி கட்டமாகிய இன்று நம் முன் இருக்கக்கூடிய ஓதுக்கீடு மசோதா

15th December 1961] [Sri K. Anbazhagan]

வின்மீது சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். கடந்த ஐந்து வருஷ காலத்தில் இந்த சட்ட மன்றத்தில் நான் இடம் பெற்று பலருடைய தொடர்பு கொண்டு வாழ்கிற வாய்ப்பு எனக்குக் கிடைத்த காலத்தில் இந்த சட்ட மன்றத்தில் நடை பெறுகிற பல்வேறு நடவடிக்கைகளைக் குறித்து கவனிக்கக்கூடிய அந்த வாய்ப்பு எனக்குக் கிடைத்த காரணத்தால் அதைப்பற்றி கொஞ்சம் என்னுடைய கருத்தைச் சொல்ல வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. நமது சட்ட மன்றம் மிகவும் நல்ல முறையில் நடைபெற்று வருகிறது என்று பிற மாகாணத்திலுள்ளவர்கள்கூட கண்டு களிக்கும் அளவில் நடைபெற்று வருகிறது. சாதாரணமாக நம்முடைய சட்ட மன்றத்தினுடைய தரம் உயர்ந்திருந்த போதிலும் நமது சட்ட மன்றத்தின் உறுப்பினர்களுடைய பேச்சு உண்மையாகவே மற்ற சட்டமன்ற பேச்சுக்களைவிட அதிகக் கருத்துடன் இருக்கிறது என்று சொல்வதோடு சிறந்த கொள்கைகளைக் கொண்டனவாகவும் இருக்கின்றன. இருந்தபோதிலும் இந்தச் சட்ட மன்றம் தன்னால் சாதிக்க வேண்டிய பல நோக்கங்களை சாதிக்கப்பட முடியாமல் இருக்கிறது. அதற்குக் காரணம் இந்த சட்ட மன்றத்தினுடைய கருத்துக்களை நிறைவேற்ற வேண்டுமானால் அது முடியவில்லை. அதற்கு வேண்டிய அதிகாரங்கள் எல்லாம் மத்திய அரசாங்கத்தினிடம் இருப்பதாகத் தெரிய வருகிறது. இந்த சட்ட மன்றத்திற்கு இருக்க வேண்டிய அதிகாரம் பூராவும் மத்திய அரசாங்கத்தினிடம் இருப்பதாகத் தெரியவருகிறது. இந்தச் சட்ட மன்றத்தில் பேசப்படுகிற பல்வேறு பிரச்னைகள் எல்லாம் மத்திய அரசாங்கம்தான் முடிவு செய்யவேண்டும் என்று சொல்லப்படுகிறது. மத்திய சர்க்காரைக் கேட்டிருக்கிறோம், அவர்களிடமிருந்து பதில் வர வேண்டியதாக இருக்கிறது என்று இப்படியெல்லாம் பல முறைகளில் அமைச்சர்களால் பதில் சொல்லப்படுகிறது. பொது மக்களுடைய பிரச்னைகளையெல்லாம் தீர்த்து வைக்கவேண்டுமென்று சொல்லும்போதெல்லாம் மத்திய சர்க்காரைக் கேட்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தால் இந்த சட்ட மன்றத்தின் மீது பொது மக்களுக்கு என்ன மதிப்பு இருக்கும் என்பதை கவனிக்க வேண்டும். இதைக் கண்டால்தான் இந்த சட்ட மன்றத்தினுடைய அதிகாரத்தையெல்லாம் மத்திய அரசாங்கத்திற்குக் கொடுத்துவிட்டதுபோல் தோன்றுகிறது. நம்முடைய சட்ட மன்றத் தலைவர் கனம் சுப்ரமணியம் அவர்கள் எவ்வளவோ திறமைசாலிதான். அவர் டில்லி சட்டசபைக்குப் போவதைப் பார்த்தால் என்ன தோன்றுகிறது என்றால் ஒருக்கால் அவருடைய கை இங்கிருப்பதால் கட்டப்பட்டிருக்கிறது என்ற எண்ணத்தில் அங்கு போகிறாரோ என்னமோ, தான் அங்கு இருந்து கொண்டு தாமும் மற்றவர்களுடைய கையைக் கட்டலாம் என்ற உத்தேசத்துடன் அங்கு போகிறாரோ என்றுகூட தோன்றுகிறது. தாம் அங்கே போய் உட்கார்ந்து கொண்டு மற்றவர்களுடைய கையைக் கட்டலாம் என்ற எண்ணத்தால் போகிறாரோ என்றுகூட நான் எண்ணுகிறேன். தன்னுடைய திறமையான கைகள் கட்டுப்பட்டிருக்கிறதே அதனால் அங்கு போயாவது தன்னுடைய திறமையைக் காட்டலாம் என்ற தூண்டுதல்தான் அவரை அங்கு போவதற்கு தூண்டிற்றோ என்று

கூட தோன்றுகிறது. நமது நிதி அமைச்சர் அவர்கள் நல்ல திறமையான சிறந்த சட்ட மன்றத் தலைவர்தான். அப்படி அவர் நம்மை விட்டு விட்டு பாராளுமன்றத்திற்குப் போவதைக் கண்டு நான் ஆழ்ந்த வருத்தத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப்படி அவர் அங்கு போய் இந்த அரசாங்கம் மேற்கொண்டிருக்கக்கூடிய கொள்கைகளை அங்கே இருந்து கொண்டு வலியுறுத்துவார் என்று எண்ணுகிறேன். அதற்கு அங்கு அவர் சென்று முழு முயற்சியும் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். நம்முடைய நாட்டிற்கு தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டும் என்று சொன்ன போது பல தலைவர்கள் எடுத்துச் சொல்லியும், காங்கிரஸ் கட்சியிலுள்ள பல தலைவர்கள் எடுத்துச் சொல்லியும் அதை அவர் ஒத்துக் கொள்ளாமல் பெயரளவில் மட்டும் ஒத்துக்கொண்டு மத்திய சர்க்கார் சம்பந்தப்பட்ட வரையில் "மெட்ருஸ் ஸ்டேட்" என்றும் மற்றவைகளில் தமிழ்நாடு என்ற பெயர் வைத்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்தார். இதைப் பார்த்தால் நமது உரிமையைக்கூட மத்திய சர்க்காருக்குக் விட்டுக் கொடுக்கக் கூடிய அளவில் இருக்கிறது என்றுதான் தோன்றுகிறது. கனம் நிதி அமைச்சருக்கு அப்படி தமிழ் நாடு என்ற பெயர் கொடுக்க வேண்டுமென்ற எண்ணம் இருந்தபோதிலும்கூட அதற்கு பூரா சம்மதம் கொடுக்காமல் பெயரளவில் மட்டும்தான் ஒப்புக் கொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதைப்போலவே மொழிப் பிரச்னை சம்பந்தமாகவும் இந்தியை கட்டாயமாகப் புகுத்தக்கூடாது என்று சொன்னபோதும்கூட அதை அவர் பூர்ணமாக ஒப்புக்கொள்ளாவிட்டாலும்கூட ஹிந்தி இங்கே திணிக்கப்பட முயற்சிக்கப்படுகிறது. அதன் மூலம் தேவ நாகரி எழுத்து வேறு கொண்டுவரப்போகிறார்கள். தேவநாகரி எழுத்து நமக்கு வேண்டியதும் இல்லை, அது நமக்கு அவசியமும் இல்லை. அதை நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொண்டிருந்தாலும்கூட அது திணிக்கப்படுகிறது. மத்திய சர்க்கார் அதற்கு நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இதனால் நமது உரிமைகள்கூட பாதிக்கக்கூடிய அளவில் இருக்கிறது. இதை அவர் உணராமல் இல்லை. இதெல்லாம்தான் நம்முடைய உரிமைகளை பறிப்பதாக இருக்கிறது.

நமது வருவாயைப் பெருக்கவேண்டுமென்றாலும் அதையும் செய்துகொள்ள முடியவில்லை. மாகாணங்களுக்கு வரவேண்டிய வரிகளையெல்லாம் அவர்கள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதிலிருந்து நமக்கு வரவேண்டிய பங்கு கிடைப்பதும் இல்லை. ஆனால் மத்திய சர்க்கார் சமஷ்டி சர்க்கார் என்று சொல்லப்படுகிறது. பல மாகாணங்களின் வருமானங்களை அவர்கள் எடுத்துக் கொண்டு போய்க்கொண்டிருந்தால் சமஷ்டி என்பதற்கு அர்த்தம் இல்லாமல் போகும். அந்த அளவுக்கு மாகாண சர்க்காருடைய உரிமைகள் எல்லாம் பாதிக்கப்படுகிறது. மாகாண சர்க்காருக்கு வரக்கூடிய வருமானங்கள் எல்லாம் போய் விடுகிறது. இதை கனம் அமைச்சர் அவர்களே உணருவார் என்று நினைக்கிறேன். அதைப்போலவேதான் மக்களுக்கு திட்டங்களிடும் நோக்கில்

15th December 1961] [Sri K. Anbazhagan]

எப்படியாவது வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு நாம் முயற்சிக்க வேண்டும். இல்லையேல் வருமானத்தை தேடிக் கொள்வதற்கு முயற்சிக்க வேண்டும், மக்களை துன்புறுத்தாத அளவில். ஆனால் கனம் நிதி அமைச்சர் அவர்கள் மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் ஒருவருடைய சராசரி வருமானம் 55 ரூபாய்க்கு உயரும் என்று தெரிவித்திருக்கிறார். திட்டத்தினால் நமக்கு என்ன பலன் என்ற தலைப்பின்கீழ் பார்த்தால் அது விளம்பரத்திற்காகத்தான் ஏற்படுகிறது. எந்த அளவில் நமக்கு சந்தோஷம் வருகிறது என்பதைப் பார்க்க வேண்டும். நமக்கு என்ன பலன் என்ற சந்தேகக் கேள்விகள் எல்லாம் வருகிறது. அதே நேரத்தில் ஒருவருடைய சராசரி வருமானம் 55 ரூபாய் என்று சொல்லுகிறார். அதாவது ஐந்து வருஷங்களில் 55 ரூபாய் என்றால் ஒரு வருஷத்திற்கு பத்து ரூபாயாகிறது. அதாவது ஒரு வருஷத்தில் சராசரி வருமானம் பத்து ரூபாய் உயருகிறது என்று சொல்லுகிறார். அதே நேரத் தில் ஒரு வருஷத்தில் விலைவாசியின் உயர்வு 25 முதற்கொண்டு 30 வரையில் உயருகிறது. இப்படி விலைவாசி 25 முதற்கொண்டு 30 வரையில் உயர்ந்தால் இந்த பத்து ரூபாய் உயர்வு போதுமா? என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இதே நேரத்தில் பெரிய வருமானத்தைப் பெறக் கூடியவர்களும் இருக்கிறார்கள். அவர்களுள் எவ்வளவோ ஏழை களும் இருக்கிறார்கள். அகில இந்திய புள்ளி விவரத்தை எடுத்துக் கொண்டால் ஒரு கோடி 40 லட்சம் பேர்களுக்கு மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் வேலை வாய்ப்பு தேடி தர வேண்டிய தாக இருக்கிறது. அகில இந்திய புள்ளி விவரப்படி இன்றைக்கு குறைந்த வருமானம் வரக்கூடியவர்களுடைய எண்ணிக்கையை எடுத்துக்கொண்டால் அகில இந்தியாவில் ஒரு நாளைக்கு ஆறு அணா வருமானம் வரக்கூடியவர்கள் ஐந்து கோடி பேர்கள் இருக் கிறார்கள், நாலு கோடி பேர்கள் நாலணா வருமானம் வரக்கூடியவர் கள் இருக்கிறார்கள். இரண்டு கோடி பேர்கள் இரண்டு அணா வரு வருமானத்தைக்கூட எட்டிப் பிடிக்க முடியாத பஞ்ச நிலைமையில் இருக்கிறார்கள். இதைத் தவிர எத்தனையோ பேர்கள் பஞ்சம் பட்டினியால் இருக்கக்கூடியவர்களும் இருக்கிறார்கள். இந்த ரீதி யில், அகில இந்திய ரீதியில் ஒரு கோடி நாற்பது லட்சம் பேர் களுக்கு வேலை தேடித்தருவதாகச் சொல்லுகிறார்கள். அந்த அளவில் தமிழ்நாட்டின் பங்கு பதினைந்தில் ஒரு பங்கு பேர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு தமிழ் நாட்டில் வேலை வாய்ப்பு தேடித்தரவேண்டியதாக இருக்கிறது. இந்த நிலைமையில் விலை வாசிகள் வேறு உயர்ந்து கொண்டிருக்கிறது. இப்படி விலைவாசி உயர்ந்து கொண்டிருக்கும்போது பொது மக்களின் பொது வாழ்வு என்ன ஆவது. அதை கனம் அமைச்சர் அவர்கள் இங்கே இருந் தாலும் சரி, வேறு இடத்திற்குப் போனாலும் இதைப்பற்றி சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதற்கு என்ன வழி காணப் போகிறார்கள் என்பது தெரியவில்லை. இந்த நிலைமையில் குறிப் பாகச் சொன்னால் அதிகப்படியான நிதி பெரிய முதலாளி களுடைய கையில் சிக்கிக் கொண்டிருக்கிறது. அதிலும் குறிப்

பாக இரண்டொரு முதலாளிகளிடம் இன்றையதினம் கணக்குப் படி பார்த்தால் 700 கோடி ரூபாய் முடங்கிக் கிடக்கிறது. அவர்களிடம் இப்படி மூலதனமாக இருக்கக்கூடிய நேரத்தில் நம்முடைய சர்க்காருக்கு 97.8 கோடி ரூபாய் கிடைக்கும் என்றும் 100 கோடி ரூபாயை எட்டிப் பிடிக்க முடியுமோ, முடியாதோ என்று தோன்றுகிறது என்றும் சொல்லப்படுகிறது. இந்த அளவில் பொது மக்களுடைய வாழ்க்கைத்தரம் எந்த அளவிலாவது உயர்ந்திருக்கிறதா என்று பார்க்க வேண்டும். எந்த விதத்திலும் அதில் மாற்றம் ஏற்படவில்லை. இந்த நிலைமையில் எப்படி நம்மை நாமே பாராட்டிக் கொள்வது. இருந்தபோதிலும் நமது நிதி அமைச்சர் அவர்கள் நல்ல ஆற்றல் படைத்தவர்தான், தகுதி வாய்ந்தவர் தான், பேச்சு ஆற்றல் படைத்தவர்கூட. பிறரை மடக்கிப் பேசும் ஆற்றல் அவருக்கு உண்டு. முன்னால் சொன்னதை பின்னால் சொல்லும்போது அதை மாற்றி அமைத்துச் சொல்லக் கூடிய ஆற்றலும் படைத்தவர் அவர். அதைக் கண்டு நான் பாராட்டுகிறேன். அவருடைய ஆற்றலைப் பற்றி நான் குறைவாகச் சொல்லவில்லை. நான் சொல்வதெல்லாம் அவருடைய திறமையெல்லாம் பொது மக்களுக்கு பயன் தரக்கூடியதாக இருக்க வேண்டும் என்பதுதான். அவருடைய திறமையும், ஆற்றலும் பொது மக்களுக்கு பயன் தரக்கூடியதாக இருக்கவேண்டும். இருந்தபோதிலும் பல துறைகளில் குறைகள் காணப்படுகின்றன. அந்தக் குறைகள் கனம் நிதி அமைச்சர் அவர்களிடத்தில் மட்டும் அல்ல, இந்த சட்ட மன்றத்திலுள்ளவர்களுக்கு மட்டும் அல்ல, இந்தக் குறைகளை நீக்க இந்த சட்ட மன்றத்தில் மட்டும் அல்ல அகில இந்தியாவிலேயே பல நிபுணர்கள் இருக்கிறார்களே அவர்களால் கூட இந்தக் குறைகளைப் போக்க வழி காண முடியவில்லை. இப்படிப்பட்ட குறைகள் இங்கு மட்டுமல்ல இதர மாகாணங்களில்கூட காணப்படுகின்றன. அதைப் போக்குவதற்கு நிபுணர்கள் போதுமான அளவில் வழி காணவில்லை. அதற்கு வழி காண வேண்டியது மிக மிக அவசியம் என்பதை இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இப்படிப்பட்ட குறைகள் ஒரு அமைச்சரிடம் மட்டுமல்ல இதர அமைச்சர்களிடமும் இருக்கின்றன. அதாவது அமைச்சர்கள் கேள்விகளுக்கு பதில் அளிப்பதைப் பார்த்தால் சாதாரணமாக எல்லா அமைச்சர்களும் நிலைமைக்குத் தக்கவாறுதான் பதில் அளிக்கிறார்கள். பின்னால் என்ன செய்ய வேண்டும் என்பதை எண்ணி பதில் சொல்வதாகவே இல்லை. பதில் அளிக்கும்போது தகுந்த பதில் சொல்லாமல் பிரச்சனையை தீர்க்கும் அளவில் பதில் சொல்லாமல் தகவல் இல்லை என்று சொல்லக்கூடிய அளவில் பதில் சொல்லுகிறார்கள். பதில் கொடுப்பது எப்படி இருக்கிறது என்றால் அந்த சமயத்தில் சமாளித்துக் கொள்வதற்கு பதில் சொல்லுகிறார்களே தவிர பிரச்சனையை தீர்க்கும் அளவில் பதில் சொல்வதாகவே இல்லை. அந்தந்த சமயங்களில் ஏதாவது பதிலை சொல்லிவிட்டு தப்பித்துக் கொள்ளும் அளவில்தான் பதில் சொல்லப்படுகிறது. பதில் சொல்லும்போது காரணங்களைக்கூட கூறுவது இல்லை. கொள்கைகளை ஊடுருவிப் பார்த்து பதில் சொல்ல வேண்டும். கேள்விகளைக் கேட்கும்போது

அதன் விவரங்களைத் தெரிந்துகொண்டு கேள்விகளைக் கேட்பது இல்லை. விவரங்களை தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அளவில் தான் கேள்விகள் கேட்கப்படுகின்றன. ஆகவே எங்களுக்கு விவரங்களை விளக்க வேண்டும். எனக்கு முன் பேசிய கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதைப்போல் கனம் ரிவினியு அமைச்சர் அவர்கள் பதில் சொல்வதைப் பார்த்தால் அவருக்கு என்ன அடைமொழி சொல்வது என்று தெரியவில்லை என்று சொன்னார். அவருக்கு "நகைச்சுவை அமைச்சர்" என்று சொல்லலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. அவர் பதில் அளிக்கும் போது எந்த விஷயங்களாக இருந்தாலும் அது எனக்கு விளங்குவதாகவே இல்லை. சில அமைச்சர்கள் படிக்கும்போதுகூட எனக்கு விஷயங்கள் விளங்கவில்லை. திரு. வெங்கட்டராமன் அவர்கள் கேள்வி நேரத்தில் பதில் அளிக்கும்போது மிகத் தெளிவாக அளிக்கிறார்கள்; நல்ல கருத்துக்களைக்கூடச் சொல்கிறார்கள். ஆனால், அதே நேரத்தில், ஏதாவது ஒரு பெரிய திட்டத்தைப் பற்றியோ முற்போக்கான எண்ணத்தைப் பற்றியோ வலியுறுத்தப்படுமானால், 'அது பரிசிலனையில் இருக்கிறது' என்று ஒரு கட்டத்திலே முடித்து வைக்கிறார். திரு. கக்கன் அவர்கள் பதிலளிக்கும்போது, உண்மையாகவே ஆங்கிலத்தில் எழுதிக் கொடுத்ததை அவர்கள் படிக்கும்போது படுகின்ற துன்பமும் தொல்லையும், எழுதி அவர்களுக்கு அளிக்கப்படுகிறபோது அவர்கள் அதைப் படித்துப் பார்ப்பதற்கு அதிக நேரமோ ஓய்வோ இல்லாத காரணத்தால், படிக்கும்போது நாங்கள் புரிந்துகொண்டு கேள்வி கேட்க முடியவில்லை. நான் பொதுவாக எங்கள் சார்பில் கேட்டுக்கொண்டது, தமிழிலேயே முதல் கேள்விக்கு விடை அளித்தால் நாங்கள் புரிந்துகொண்டு தொடர் கேள்விகள் கேட்க எளிதாக இருக்கும் என்பது. என்ன காரணத்தாலோ அந்த முறை பின்பற்றப்படவில்லை. அமைச்சர்கள் எல்லோரையும் எடை போட்டுப் பேசுகிறேன் என்று எண்ணவேண்டாம். என்னுடைய நிலைமைக்கேற்பத் தோன்றும் கருத்துக்களைச் சொல்கிறேன். ஆனால், நம்முடைய அமைச்சர்கள் அத்தனை பேரும் அனுபவம் உடையவர்கள் தான், என்னைவிட. நான் யாராவது ஒரு அமைச்சரை பந்தத்துடன் பேசலாம் என்றால் அது மின்சார அமைச்சர் திரு. ராமையா அவர்களைப் பற்றித்தான். நானும் அவர்களும் ஒன்றாகப் படித்தோம். ஒரு சமயம் அவரும் நானும் பேசிக்கொண்டிருந்தபோது, அவர் 'நீ ஆனர்ஸ் வகுப்பில் படித்தாய்; அப்பொழுது நான் இண்டர்மீடியெட் ஜூனியர் வகுப்பில் படித்தேன்; நீ தான் எனக்கு முன்னால் படித்தாய்' என்று சொன்னார்கள். அன்றையதினத்திலிருந்து அவரும் காங்கிரசிலே இருக்கிறார், நல்ல வேளையாக. நானும் இந்தக் கொள்கையோடு இருக்கிறேன். அப்படி இருக்கிற காரணத்தால், அப்படிப்பட்ட மின்சார அமைச்சர் அவர்கள் மிக வேகமாக, சுருசுருப்போடு பதில் அளிப்பார் என்று எதிர்பார்க்கும் பல நேரத்தில் மின்சாரம் எவ்வளவு வேகமாகப் பாய்கிறதோ அதற்கு நேர்மாறாக, மிக அமைதியாக, ஆற அமர, கொஞ்சம் காலம் கடத்திப் பதிலளித்துச் சமாளித்துக் கொள்கிறார்கள்.

[Sri K. Anbazhagan] [15th December 1961

இப்படி அமைச்சர்களுடைய திறமை எப்படியிருந்தபோதிலும் நிலைமையைச் சீர்திருத்த வேண்டும், ஒரு முற்போக்கான அமைப்பு ஏற்படவேண்டுமென்ற நோக்கத்தோடு பதிலளிக்காத காரணத்தால் பல சிக்கல் ஏற்படுகிறது. அது மட்டுமல்ல, குறிப்பாக நான் சொன்னால், ஏதாவது குற்றங்குறையை நாங்கள் இங்கே பேசுகிறோம் என்றால் குற்றஞ்சாட்டவேண்டும் என்று அல்ல; எந்த அமைச்சரிடமும் தனிப்பட்ட முறையில் விருப்பு வெறுப்பு எங்களுக்கு இல்லை. பொதுவான கொள்கைக்காகத் தான் பேசுகிறோமே தவிர, நிலைமை மாறவேண்டும், வளரவேண்டும் என்று பேசுகிறோமே தவிர, இந்த அமைச்சர் வேண்டப்பட்டவர், இந்த அமைச்சர் வேண்டப்படாதவர், இவருக்குப் பகையாகப் பேசவேண்டும் என்ற நோக்கம் கிடையாது. ஆனால், அமைச்சர்கள் என்ன நினைக்கிறார்கள்? குற்றங்களைப்பற்றிப் பேசி, இப்படி யெல்லாம் நடக்கிறது என்று நாங்கள் சொன்னால், இவற்றை வேண்டுமென்றே சட்டமன்றத்தில் நாங்கள் பேசுவதாக நினைக் கிறார்கள். நாங்கள் அப்படிச் செய்ய விரும்பவில்லை. அமைச்சர் களிடத்தில் நெருங்கிப் பழகுவதும், அடிக்கடி பார்ப்பது என்பதும் அவசியந்தானா என்பதிலே சந்தேகப்படுகிறவன் நான். கடமைகளைச் செய்து கருத்துக்களைத் தெரிவிக்கவேண்டும் என்பது தான் என்னுடைய கொள்கை. அமைச்சர்களிடத்தில் நெருங்கிப் பழகும் காரணத்தால் யாரேனும் சிலபேர் தவறாக எண்ணக் கூடும். அடிக்கடி அமைச்சர்களைச் சந்திக்கும் காரணத்தால் சொந்த அலுவலுக்காகப் போகிறார் என்று எண்ணக்கூடும். அப்படியே இந்தச் சட்ட மன்றத்தில்கூட ஒரு தடவை சொல்லப் பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் திரு. அண்ணா துரை அவர்கள் இங்கே பேசும்போது சொன்னார், "நான் பாகல் மேடு மாநாடு நடைபெற்றதற்குப் பின்னால் தண்டலத்தில் மாநாடு கூட்டினேன்; முதலமைச்சர் வந்தார்; என்னுடைய தொகுதியின் குறைகள் எடுத்துச் சொல்லப்பட்டன; அப்படிச் சொல்லப்பட்டும் கூட, இன்னும் நிறைவேற்றப்படவில்லை" என்று அண்ணா அவர்கள் தெரிவித்தபோது, முதலமைச்சர் உட்கார்ந்துகொண்டே "உங்களுடைய தொகுதிக்கு அழைத்துக்கொண்டு போய் என்னி டத்தில் வேலை வாங்கப் பார்த்தீர்கள்; என்னை ஏமாற்றப் பார்த் தீர்கள்; நான் ஏமாறவில்லை" என்று சொன்னார்கள். அந்த மனப் போக்கு இருந்திருக்கிறது. அப்படியிருக்கும்போது, நாங்கள் நெருங்கி நேரடியாகக் கேட்பதைவிட, பிரச்சனைகளைச் சட்ட மன்றத்தில் வைப்பதுதான் நல்லது என்று கருதித்தான் இதுவரை பணியாற்றி வந்திருக்கிறோம். நிதி அமைச்சராக மட்டுமல்லாமல் அவர்கள் ஆளும் கட்சித் தலைவராகவும் இருக்கும் காரணத்தால் அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ள விரும்புவது எல்லாம் அவர்களிடத்தில் எங்களுக்கு எந்தத் தனிப்பட்ட மாறுபட்ட உணர்ச்சியும் இல்லை. அவரைப்பற்றி குரோத உணர்ச்சி இல்லை. திரு. சுப்பிரமணியம் அவர்கள் மட்டும் தேர்தலில் வெற்றி பெறக் கூடாது, திரு. காமராஜ் அவர்கள் மட்டும் தேர்தலில் வெற்றி பெறக்கூடாது, திரு. கக்கன் அவர்கள் மட்டும் வெற்றி பெறக்

15th December 1961] [Sri K. Anbazhagan]

கூடாது என்று இப்படிப்பட்ட உணர்ச்சியோ தனிப்பட்ட பகை உணர்ச்சியோ எதும் இல்லை. ஆனால் எங்கள் கொள்கைக்காக நாங்கள் வாதாடுகிறோம். அப்படி வாதாடும்போது, திரு. சுப்ர மண்யம் அவர்கள், தம்முடைய கொள்கையில் ஊறிப்போயிருக்கும் காரணத்தால், தம்முடைய கொள்கையில் அதிக நம்பிக்கை வைத்திருக்கும் காரணத்தால் எப்படி எதிர்க்கட்சியிலுள்ளவர்களை ஓரே துச்சமாகச் சில நேரங்களில் பேசிவிடுகிறார்களோ, அதே போல, சில சூழ்நிலையில் நாங்களும் எங்கள் கொள்கையை வற்புறுத்தியிருக்கிறோமே தவிர, வேறு எந்த விதத்திலும் அமைச் சரிடத்தில் எங்களுக்கு மாறுபாடு இல்லை. நிதி அமைச்சர் அவர்கள் டில்லி போகும் நேரத்தில், இதை நான் தெரிவித்துக் கொள்வது இங்கே திராவிட முன்னேற்றக் கழகத்தினிடத்திலே அவர் நெருங்கியிருந்து பழக வாய்ப்புக் கிடைத்ததால், அங்கே உள்ளவர்களுக்குத் தெரிவிக்கவேண்டும் என்பதற்காகத்தான். திராவிட முன்னேற்றக் கழகம் சிறிய கட்சி என்ற எண்ணத்தில் அதனுடைய கொள்கையை அலட்சியப்படுத்தி விடுவதோ, அவர்கள் லட்சியத்தை அகில இந்திய லட்சியத்திற்கு மாறு பட்டது என்ற காரணத்தால் அழித்துவிடலாம் என்று எண்ணு வதோ இயலுவதல்ல. அப்படி சட்ட மன்றத்தில் சில பேர் எதிரிலிருந்து தங்களுடைய கொள்கைக்குத் தொடர்ந்து வாதாடு கிறார்கள், அந்தக் கொள்கையைப்பற்றியும் பரிசீலிக்கத்தான் வேண்டும், லட்சியத்தைப்பற்றி எண்ணிப்பார்க்க வேண்டுமென்ற கருத்தை நிதி அமைச்சர் அவர்கள் டில்லிக்குப் போகிறபோது, காங்கிரஸ் சார்பாக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டுப் போனாலும், தமிழ்நாட்டு மக்களுடைய பிரதிநிதி என்ற காரணத்தால் இந்தக் கருத்தை அங்கே பிரதிபலிக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். இதைக் கேட்டுக்கொள்வது அன்பழகனுக்காக மட்டுமல்ல, திராவிட முன்னேற்றக் கழகத்திற்காக மட்டுமல்ல, தமிழ்நாட்டிலே வாழும் எல்லா மக்களுக்காகவும்தான் என்று நான் நிதி அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள் கின்றேன்.

இந்தச் சட்ட மன்றத்தில் முன்னாலே இருந்த நம்முடைய சபாநாயகர் அவர்கள் இப்பொழுது இல்லை என்பது எங்களைப் போல் முதல் தடவை வந்தவர்களுக்கு மிக அதிகமான வருத்தத் தைத் தருவதுதான் என்றாலும் இயற்கை நியதியை நாங்களும் எண்ணிப்பார்த்து உணர்ந்துகொள்ள முடியும். இப்பொழு திருக்கும் துணை சபாநாயகர் அவர்கள் சட்ட மன்றத் தலைவராக இருந்து, தம்முடைய கடமையைச் செம்மையாகவே செய்திருக் கிறார்கள். அவருடைய குரலை கேட்டு பயப்பட்டாலும் எண்ணத் தைக் கண்டு பயப்படவேண்டிய அவசியம் எப்போதும் கிடையாது. உரத்த குரலிலே சொன்னாலும் கடமையுணர்ச் சியினாலே சொல்லியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட துணைத் தலை வரைப் பெற்று நாம் பணியாற்றியிருக்கிறோம்.

[Sri K. Anbazhagan] [15th December 1961

இதே சட்ட மன்றத்தில் மிக நல்ல பெரியவர், நம்மோடு இந்தச் சட்ட மன்றத்தில் வந்த சுவாமி சகஜானந்தா அவர்களை நாம் இழந்திருக்கிறோம். சர்தார் வேதரத்னம் அவர்கள் மறைந்திருக்கிறார்கள். இப்படி மிகப் பெரியவர்கள் சிலரை நாம் இழக்க நேரிட்டிருக்கிறது. நம்மோடு உறுப்பினர்களாக வந்த ஆத்தூக் குடி பிரதிநிதிகளை நாம் இழந்திருக்கிறோம். இப்படிப்பட்ட நிலைமை அவ்வப்போது ஏற்பட்ட காரணத்தால் சிலரை இழந்தாலும் இங்கிருக்கும் நாம் அனைவருமே கடமையைச் செய்ததாகத்தான் நான் எண்ணுகிறேன். அதிலும் குறிப்பாக, ஒரு எதிர்க்கட்சி என்ன கடமையை ஆற்றவேண்டுமென்று உலகியலில், அரசியலில், ஜனநாயகத்தில் யாரும் எதிர்பார்க்கிறார்களோ அதைத் திராவிட முன்னேற்றக் கழகம் இங்கே செய்திருக்கிறது. அதுபோல், பக்கத்து கட்சிகள், துணைக்கட்சிகள், மற்ற எதிர்க்கட்சி மெம்பர்கள் எல்லோரோடும் அந்த வகையில் ஒத்துழைத்து நாங்கள் எங்கள் கடமையை ஆற்றியிருக்கிறோம். எங்கள் கடமையை அந்த வகையில் ஆற்றிய காரணத்தால் நிதி அமைச்சர் அவர்களுக்கு ஏதேனும் கஷ்டம் இருக்குமானால் அவர் அதற்காக வருத்தப்படமாட்டார், துக்கப்படமாட்டார், அதற்காக எங்களைக் கண்டிப்பதற்கு இடம் இருக்காது என்று நான் நம்புகிறேன். இங்கிருக்கும் அத்தனை அமைச்சர்களும் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்தி என்னுடைய உரையை முடிக்கிறேன்.

**SRI P. G. KARUTHIRUMAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஐந்தாண்டுக் காலத்தில் இறுதியாக சட்டசபைக் கூட்டம் இன்றோடு முடிவடைய இருக்கிறது. இந்த ஐந்து வருஷ காலமும் அங்கத்தினர்கள் எல்லோரும் கண்ணியமான முறையில், தமிழ் நாட்டின் பண்பாட்டுக்கு ஏற்ப, நேர்மையுடன் நடந்து கொண்டதற்காக அவர்களை நான் பாராட்டுவதோடு, இந்த ஐந்து வருஷ காலத்திலே சட்டசபை நடவடிக்கைகள் மற்ற மாநிலத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது எந்த விதத்திலும் குறைவு இல்லாமல் கண்ணியமாக நடைபெற்றிருக்கின்றன என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கின்றேன்.

எல்லா அங்கத்தினர்களையும் திருப்தி பண்ண முடியாத நிலை கோறடா என்கிற ஒருவருக்குத்தான் இருக்க முடியும். அந்தப் பணி எனக்கு இடப்பட்டிருந்தது. சட்டசபையைக் குறித்த காலத்திலே குறித்த நேரத்திலே முடிக்கவேண்டும் என்ற நியதிக்கேற்ப விவாதங்கள் நடைபெறவேண்டுமென்ற காரணத்தினால் நான் அந்தப் பணியை ஓரளவு நிறைவேற்றி வந்திருக்கிறேன். தனிப்பட்ட முறையிலோ, ஒரு கட்சியின் கண்ணோட்டத்திலோ நான் அந்தப் பணியைச் செய்யவில்லை என்பதை நான் மிகவும் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

சட்டசபை வெற்றிகரமாக நடக்கவேண்டுமானால், அது எதிர்க்கட்சியிலே இருக்கும் அங்கத்தினர்கள், எதிர்க்கட்சித் தலைவர்கள் இவர்களுடைய ஒத்துழைப்பைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

15th December 1961] [Sri P. G. Karuthiruman]

கனம் எதிர்கட்சித் தலைவர் திரு. வி. கே ராமசாமி முதலியார் அவர்கள் பலவிதத்தில் நமக்கு ஒத்துழைப்பு கொடுத்தார்கள். கனம் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் திரு. சி. என். அண்ணாதுரை அவர்களும், எதிர்க்கட்சிகளில் உள்ள எல்லோரும் ஒத்துழைப்பு கொடுத்திருக்கிறார்கள். சட்டசபைக் குழுக்கள் அமைப்பதிலே, பொறுக்குக் கமிட்டியில் உறுப்பினர்களைப் போடுவதிலே, எல்லாக் கட்சிகளும் மிகவும் ஒத்துழைத்து, தேர்தல் இல்லாமல் எல்லோரும் ஒருமுகமாக இருந்து கமிட்டியை அமைப்பதற்கு என்னிடத்தில் நம்பிக்கை வைத்து 'ப்ளாங்க் செக்' என்று சொல்வார்களே அந்த வகையில் என்னிடத்தில் இந்தப் பொறுப்பைக் கொடுத்த காரணத்தால் இந்த ஐந்து வருஷ காலங்களில் எந்தவிதமான தகராறும் இல்லாமல் மிகவும் நல்ல முறையில் நடைபெற்றதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

நம்மிடத்திலெல்லாம் மிகவும் அன்புடனும் பண்புடனும் பழகி வந்த சபாநாயகர் டாக்டர் யு. கிருஷ்ண ராவ் அவர்கள் மறைந்தது ஈடு செய்ய முடியாத ஒரு நஷ்டமாகும்.

தாங்கள் இப்பொழுது சபாநாயகராகப் பணியாற்றி எங்களுக்கெல்லாம் ஒத்துழைப்பு தந்ததற்காக உங்களுக்கும் என்னுடைய நன்றியையும் பாராட்டுதலையும் நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதெல்லாம் சிறப்பாக நடைபெறுவதற்கு நமது சட்டசபை இலாகாவிலே இருக்கும் காரியதரிசிகள், உதவி காரியதரிசிகள், ஊழியர்கள் எல்லோரும் மிகவும் நல்ல முறையில் பணியாற்றியது குறித்து நான் மிகவும் சந்தோஷப்படுகின்றேன். சட்டசபைக் காரியாலயத்தில் பணிபுரிபவர்கள் எல்லோரும் இரவு பகல் என்று பாராமல், சட்டசபை எவ்வளவு நேரம் நடந்தாலும்கூட, அப்பொழுதெல்லாம் மனம் கோணாமல் வந்து நல்ல முறையில் வேலை செய்திருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு நம்முடைய பாராட்டுதலை இந்தச் சபையில் தெரிவிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். பாரதியார் அவர்கள் சொன்னார்கள். வீட்டில் ஒரு பூனை வளருகிறது. அந்த வெள்ளைப் பூனை பல குட்டிகளைப் பெற்றது. 11-30 a.m.

சாம்பல் நிறமொரு குட்டி—கருஞ்
சாந்து நிறமொரு குட்டி

பாம்பு நிறமொரு குட்டி—வெள்ளைப்
பாலின் நிறமொரு குட்டி

எந்த நிறமிருந்தாலும்—அவை
யாவும் ஒரேதர மன்றோ ?

என்று பாடினார். அதுபோலவே பல கட்சிகள் இங்கேயிருந்தாலும் எல்லோரும் ஒரே குடும்பமாக—தமிழ் மக்கள் முன்னேற வேண்டும், தமிழகம் முன்னேறவேண்டும் என்ற ஒரேஒரு

கொள்கை அடிப்படையில் சேர்ந்து பணியாற்றி வந்திருக்கிறார்கள். சிறுசிறு அபிப்ராய பேதங்கள் இருந்தாலும் அவற்றைப் பொருள்படுத்தாது நாட்டின் முன்னேற்றத்தையே குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றிவந்திருக்கிறார்கள். அதற்காக என்னுடைய பாராட்டுதலையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்வதோடு இதே நிலை வருகிற சட்டமன்றத்திலும் கூட நீடிக்க வேண்டும் என்று ஆண்டவனைப் பிரார்த்திக்கொள்வதோடு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : சட்டமன்ற துணைத் தலைவர் அவர்களே, சட்டசபையின் கடைசிக் கூட்டமாக—கடைசி நாளாகிய இன்று கடந்த பத்து வருஷ காலமாக ஏற்பட்டுள்ள அநுபவங்களைக் கொண்டு சில வார்த்தைகள் பேசவிரும்புகிறேன். முதன்முதலாக சட்டசபைக்கு வருகின்றவர்கள் சட்டசபையில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. சட்டசபையில் எவ்வாறு பேசவேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. அதுவும் பொதுக்கூட்டங்களிலேயே பலகாலம் பேசிப் பழகியவர்கள் முதன் முறை சட்டசபைக்கு வந்தவுடன் தோழர்களே என்று ஆரம்பித்துவிடக் கூடும். 52-ம் வருட சட்டமன்றத்தில் அதைப் பார்த்தேன். 57-ம் பார்த்தேன். நான் கூட 52-ல் வந்தவுடன் அப்படிப் பேசி திருத்தப்பட்டிருக்கிறேன். எனக்கு முதன் முதலாக சட்டமன்றத்தில் எப்படி நடந்துகொள்ளவேண்டும், பேசவேண்டும் என்பதற்கு வழிகாட்டியாக இருந்தவர் திரு. சிவஷண்முகம் பிள்ளைதான் என்றால் அது மிகையாகாது. அவருக்கு முதன்முதலில் மரியாதை செலுத்த வேண்டிய கடமை உடையவனாக இருக்கிறேன். சட்டசபையில் எப்படிப் பணியாற்ற வேண்டும், கேள்வி நேரத்தை எவ்வாறு பயன்படுத்தவேண்டும் என்பதை முதன்முதலில் எனக்கு கற்றுக்கொடுத்த ஆசான் திரு. சிவஷண்முகம் பிள்ளை அவர்கள் தான். அவர் டெல்லிக்கு அனுப்பப்பட்ட நேரத்தில் அவரைத் தொடர்ந்து அவர் காட்டிச் சென்ற பண்பாட்டிலேயே சபையை நடத்திச் சென்று நம்முடைய அன்பையும் பாராட்டுதலையும் பெற்றவர் திரு. கிருஷ்ணாராவ் அவர்கள். எதிர்க்கட்சிக்காரர்களுக்குத்தான் பேசுவதற்கு நிறைய சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும் என்ற சம்பிரதாயத்தை உண்டாக்கிக் கொடுத்தவர் திரு. சிவஷண்முகம் பிள்ளை. அதுபற்றி ஒரு சில ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள்கூட அவரிடத்தில் தனியாக கோபமாகவும் கண்டனமாகவும் பேசியிருக்கிறார்கள். இருந்தாலும் எதிர்க்கட்சிக்காரருக்கே அதிக சந்தர்ப்பத்தைக் கொடுக்கவேண்டும் என்ற அவரது சம்பிரதாயத்தையொட்டி காலஞ்சென்ற நமது மதிப்பிற்குரிய டாக்டர் கிருஷ்ணாராவ் அவர்களும் சிறந்த முறையில் பணியாற்றியிருக்கிறார்கள். அதிலும் சிறப்பாக அவர் கன்னடியராக இருந்தபோதிலும் தூய தமிழில் பேசி நம்மையெல்லாம் பரவசப்படுத்தி, நம்மையெல்லாம் உற்சாகப்படுத்தி சபை

15th December 1961] [Sri A. Govindasamy]

நடவடிக்கைகளைத் திறம்பட நான்காண்டுகள் நடத்திச் சென்றார் என்று சொல்ல வேண்டும். கடந்த பத்து வருஷ காலமாகத் தாங்கள் உதவி சபாநாயகராக இருந்து பணியாற்றியிருக்கிறீர்கள். சபாநாயகர் சபையில் இல்லாத காலங்களில் தாங்கள் அந்த ஆசனத்தில் அமர்ந்து பல சிக்கலான பிரச்சனைகளுக்கு எல்லாம் கூட முடிவு கூறியிருக்கிறீர்கள். திரு. அன்பழகன் குறிப்பிட்டது போல சற்று உரக்கப் பேசி சபையில் எழும் சிக்கல்களை சமாளித்திருந்தாலும் அது பிரச்சனையைத் தீர்ப்பதற்கு உதவியாகும்படி இருந்ததேயல்லாது யாரிடத்திலும் தனிப்பட்ட வெறுப்பு விருப்புக் காட்டாமல் இந்த அவையைத் திறம்பட நடத்தி வந்தீர்கள், நடத்திக்கொண்டு வந்திருப்பீர்கள். ஆனால் எனக்கு ஒரு குறை உண்டு. சபாநாயகரின் அந்தஸ்தை உங்களுக்குத் கொடுத்திருந்தாலும் குறுகிய இந்தக் காலத்திற்காவது உங்களைச் சபாநாயகராக நியமித்திருக்கலாம். அப்படிச் செய்ய வேண்டுமென்று எங்கள் கட்சியின் சார்பில் ஆதரவுகூடக் கொடுத்தோம். என்னகாரணத்தினாலோ அந்த ஒன்று நடைபெறவில்லை. இருந்தும் இதுவரையில் இந்தச் சட்டசபையை நல்லமுறையில் தாங்கள் நடத்தி வந்திருப்பதற்கு என்னுடைய கட்சியின் சார்பில் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அநுமாத்திரம் இல்லாமல் 1952-ம் ஆண்டில் உழைப்பாளர் கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்த அவைக்கு வந்து திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளை இங்கே எடுத்துச் சொன்னபோது "சாலிடரி வாய்ஸ்" ஒரே ஒரு குரல் இங்கே திராவிட முன்னேற்றத்தைப்பற்றிப் பேசுவதற்கு இருக்கிறது என்று சொன்னார். வேண்டுமானால் அவர் தேர்தலுக்கு நிற்கட்டும் என்று சொன்னார். நான் ஒன்றும் அவரைப்பற்றித் தப்பாகச் சொல்லவில்லை. தவறாக நினைக்கவேண்டாம். 57-ம் ஆண்டு திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தலில் நின்று குறுகிய அளவுதான் என்றாலும் 15 பேர்கள் வந்து இதுவரையிலும் பணியாற்றியிருக்கிறார்கள். சர்க்கார் எந்த நல்ல திட்டங்களைக் கொண்டு வந்தாலும் ஆதரித்திருப்பதோடு அல்லாததை எதிர்த்தும் வந்திருக்கிறோம். திராவிட முன்னேற்றக் கழத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் கருத்தை அழுத்தந்திருத்தமாகச் சொன்னபோது கொஞ்சம் அமைச்சர்களுக்கு வருத்தம் ஏற்பட்டாலும்கூட அவர்களும் எங்கள் கருத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். உண்மையில் எங்கள் கருத்தை நிறைவேற்றுவதற்கு அவர்கள் உறுதுணையாக இருந்திருக்கிறார்கள் என்றே சொல்லவேண்டும். அதற்காக எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

நமது முதல் அமைச்சர் அவர்கள் வெளியில் திராவிட முன்னேற்றக் கழகத்தையும், மற்ற கட்சிகளையும் பலமாகத் தாக்கிப் பேசி வருகிறார்கள். தினமும் பத்திரிகையில் "முதல் அமைச்சரின் சவால், கர்ஜனை, சாட்டை" என்றெல்லாம் வருகிறது. இருந்தும் அவரை இந்தச் சபையைப் பொருத்த வரையில் பேசாத அமைச்சராக வைத்துவிட்டதுதான் கொஞ்சம் வருத்தம். இனிமேலாவது அவரைப் பேசுகின்ற அமைச்சராக இங்கே வைக்கவேண்டும் என்று இந்த நேரத்தில் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

நாங்கள் அவரது கட்சியை எவ்வளவு தாக்கிப் பேசினாலும்கூட அவர் அமைதியாகவே இருந்திருக்கிறார்கள். எல்லாவற்றையும் சிரித்துக்கொண்டு தாங்கிக்கொள்ளும் மனத் திடம் அவரிடம் இருந்திருக்கிறது. இந்த நேரத்திலும்கூட கட்சியைக் காப்பாற்றும் பொறுப்புணர்ச்சி உள்ளவராகத்தான் இருக்கிறார். இனி இந்தச் சபையிலும் அவர் பங்குகொள்ளும்படி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தாற்போல் இந்தச் சபையின் தலைவராக நிதி அமைச்சர் அவர்கள் 1952-ல் இருந்து பணியாற்றி வருகிறார்கள். முதல் அவையில் நிதி அமைச்சராக இருந்தார். இப்போது சபைத் தலைவராகவும், நிதி அமைச்சராகவும், கல்வி அமைச்சராகவும், நீதி நிர்வாக இலாகா அமைச்சராகவும் பல பொறுப்புகளை ஏற்றுத் திறம்பட பணியாற்றி வந்திருக்கிறார்கள். இவ்வளவு இளம் வயதில் இவ்வளவு கடும் பொறுப்புகளை பல சிரமத்திற்கிடையே குற்றங்கள் ஏற்படாதவண்ணம் பார்த்து வந்திருக்கிறார் என்றால் அந்தப் பெருமை ராஜாஜியைப் போய்ச் சாரும். ராஜாஜியின் தலைமையில் அவர் கற்றுக்கொண்ட ஒரு சில பாடங்கள்தான் இந்தச் சபையில் அவருக்கு உறுதுணையாக இருந்திருக்கிறது. இன்றையதினம் ராஜாஜி அவர்கள் மாறுபட்ட கருத்துடைய கட்சியில் இருந்தாலும் கனம் சுப்பிரமணியம் அவர்களைத் தயார் செய்து தமிழகத்திற்கு அளித்த பெருமை அவரைச் சாரும். இதையும் காங்கிரஸ்காரர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும் இந்தச் சமயத்தில் என்று சொல்கிறேன்.

அன்று ராஜாகோபாலாச்சாரி அவர்கள் சொன்னது எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. ஒருநாள் சட்டசபையில் காரசாரமாக விவாதம் நடந்துகொண்டிருந்தது, நமது நிதி அமைச்சர் அவர்களுக்கும், ராமமூர்த்தி அவர்களுக்கும். 'இப்பிரச்னையில் நான் ராஜிநாமா செய்கிறேன், நீ ராஜிநாமா செய்யவேண்டும்' என்று சொல்லி கைகலக்கும் நிலை ஏற்பட்டது. அப்பொழுது ராஜாஜி அவர்கள் நிதி அமைச்சர் அவர்களின் சட்டையைப் பிடித்து உட்கார வைத்துவிட்டு, இதுதான் கிழவர்களுக்கும், இளைஞர்களுக்கும் உள்ள வித்தியாசம், இளமைத் துடுக்காகப் பேசச் சொல்கிறது என்று அவர்கள் சொன்னது இன்று என் கண் முன் காட்சியளிக்கிறது. நிதியமைச்சர் அவர்களைவிட நான் சிறியவனாகயிருந்தாலும், அனுபவக் குறைவு இருந்தாலும் வழக்கம் போல் சொல்வதை இந்தக் கடைசி நாளிலும் சொல்ல விரும்புகிறேன். அவர்கள் அமைதிக்கு பங்கம் வராதபடி, அமைதியாக நடந்துகொண்டால் அது அவர்களது அந்தஸ்தை உயர்த்தும், பெருமையை நிலை நாட்டும் என்ற காரணத்தால் இந்த வேண்டுகோளை விடுத்துக் கொள்கிறேன். எவ்வளவு தூரம் என் கோபத்தைக் குறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவுதூரம் குறைத்துக்கொண்டு விட்டேன், இது என் சுபாவம், இதை மாற்றிக் கொள்கிறேன் என்று அவர்களே சொன்னார்கள். அதை ஏற்றுக் கொள்கிறேன். போலீஸ் இலாகாவை நிர்வகித்துக் கொண்டிருக்கிற விவசாய அமைச்சர் அவர்களிடம் அமைதி எவ்வளவு உண்டோ அவ்வளவும்

15th December 1961] [Sri A. Govindasamy]

இங்கும் இருக்கும், அறையிலும் இருக்கும். ஆனல் வெளியில் கடுமையாகயிருக்கும். ஒழித்து விடுகிறேன் என்றெல்லாம் தேர்தல் சமயத்தில் கடுமையாகச் சொல்லி வருகிருர்கள். யாரும் யாரையும் ஒழித்துக்கட்ட வேண்டியதில்லை. அரசியல் கொள் கைகளைச் சொல்லி, அவரவர்கள் திட்டங்களை எடுத்துச் சொல்லி, யார் யார் தோற்கடிக்க முடியுமோ அவர்களைத் தோற்கடிக்க முயற்சி செய்வதில் யாருக்கும் ஆட்சேபணையிருக்க முடியாது. சபையில் எந்தளவு நல்லமுறையில் பதில் சொல்ல முடியுமோ அந்தளவு நல்ல முறையில் பதில் சொல்லி எங்களுக்கு ஓரளவு திருப்தி அளித்திருக்கிருர்கள். அதற்காக அவர்களுக்கு என் பாராட்டுதல்களைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். எங்கள் மந்திரி மாணிக்கவேலு அவர்களைப் பற்றிச் சொல்லவேண்டிய தில்லை. எங்கள் மந்திரி என்று சொன்னதில் அர்த்தம் இருக்கிறது. அவர்கள் வன்னிய சமுதாயத்தை காப்பாற்றவேயிருக்கிருர்கள் என்று சொல்லி அந்த சமூகத்தாருக்கு ஒரு சிறிய சலுகைகூட காட்டாமல் அவர்களைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதற்காகத்தான் எங்கள் மந்திரி என்று சொல்கிறேன். சின்னக் காரியத்தைக்கூட எங்களால் சாதிக்க முடியவில்லை, கல்யாண சுந்தரம் அவர்கள் நிதியமைச்சர் அவர்களிடமிருந்து சிறிய காரியத்தைக்கூட சாதிக்கமுடியவில்லை என்று சொன்னதுபோல். காங்கிரஸ் கட்சியினர்கூட சொல்வார்கள், உங்கள் மந்திரியிடம் சொல்லி எப்படியாவது செய்யச் சொல்லுங்கள் என்று. அவரால் சாதாரண காரியங்கள்கூட நடப்பது கிடையாது ; ஆனல் பொறுப்பை எப்படியாவது காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்று இருந்தாலும் அவர்கள் திறமையாகப் பணியாற்றியிருக்கிருர்கள். எங்களுக்கு நல்ல காரியங்கள் செய்யாவிட்டாலும் நல்லமுறையில் அமைச்சராகப் பணியாற்றியிருக்கிருர்கள். அவரைப் பற்றி சொந் தத்தோடும், பாத்யதையோடும் எனக்குச் சொல்ல முடியும், அதை இந்த அவையில் மட்டுமல்ல, பொதுக் கூட்டங்களிலும் சொல்லியிருக்கிறேன். பின்னர், கக்கன் அவர்கள் அவர்களது கடமையை மிகமிகத் திறமையாகச் செய்திருக்கிருர்கள். குறிப் பாக பின்தங்கிய மக்களுக்கும், ஆதித் திராவிட மக்களுக்கும் எவ்வளவு செய்ய முடியுமோ அந்தளவு சேவை செய்திருக்கிருர் கள். அதை கட்சி விருப்பு வெறுப்பு இன்றி இந்த அவையில் சொல்கிறேன். மற்றவர்கள் அவர்களைப் பின்பற்ற வேண்டும். ஆனல் கட்சி என்று வரும்போது அதிகப்படியான உணர்ச்சியைக் காட்டுவார்களே தவிர தனிப்பட்ட முறையில் எங்கள் கட்சித் தலைவர் அண்ணு அவர்களோடும் அல்லது கல்யாணசுந்தரம் அவர் களோடும், மற்றவர்களுடன், காங்கிரஸ் உறுப்பினர்களிடம் நடப் பதுபோலவே நடப்பார்கள், பழகுவார்கள். அவர்களது நல்ல நடவடிக்கைகளைப் பாராட்டாமல் இருக்கமுடியாது. பின்னர், தொழில் அமைச்சர் அவர்கள் புள்ளிவிவரம் சொல்லும்போது எவ்வளவு கோபமாகக் கேட்கும் கேள்விகளுக்கும் சமாதானமான முறையில், அமைதியாக பதில் சொல்வதில் மிகவும் சாமர்த்திய மாக அவர்கள் நடந்து கொண்டிருக்கிருர்கள். தொழிற்சங்கத் தலைவராகயிருந்து பணியாற்றியிருக்கிற காரணத்தினல் அவர் கள் தொழிலாளர்களின் குறைபாடுகளை நிவர்த்திப்பதில் அதிக

கவனம் செலுத்தி நல்ல முறையில் பணியாற்றியிருக்கிறார்கள். அவர்களது அனுபவம் இன்னும் அவர்களது அந்தஸ்தை உயர்த்தப் பயன்படவேண்டும். அவர்கள் நல்ல பெயரோடு தொழிலாளர்கள் மத்தியிலும் சரி, எல்லாக் கட்சிக்காரர்களும் பாராட்டும் முறையில் அவர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களது தேவையையும் நான் பாராட்டுகிறேன். ராமையா அவர்கள் மின்சாரத் துறையில் பணியாற்றும்போதும் அவர்களுக்கு கட்சி வேலையில் தான் கண்ணோட்டம் அதிகம். இங்கு அமைதியாகயிருந்தாலும் வெளியில் தடபுடல்தான், அதிகம். அவர்கள் அதிகாரிகளை மிரட்டும்போது, அதைக்கண்டு அதிகாரிகள் பயப்படும்போது இவ்வளவு அமைதியாக இருப்பவரா வெளியில் இவ்வளவு கடுமையாக யிருக்கிறார் என்று நினைக்கத் தோன்றும். இருந்தாலும், அவர்கள் இள வயதினராகயிருந்தாலும் நாட்டுக்கு வேண்டியதை ஓரளவு செய்திருக்கிறார்கள். ஹார்தம்மையார் அவர்களைப் பற்றிச் சொல்லாவிடில் பெண் அங்கத்தினர்களுக்கு கோபம் வரும். பெண் அங்கத்தினர் பற்றி சொல்லாமல் விட்டுவிட்டாரே கல்யாண சுந்தரம் அவர்கள் என்று சொன்னார்கள். அவர்களுக்கு ஒரு சில கேள்விகளை வந்தாலும் அவர்கள் தனக்குத் தெரிந்ததை சொல்லி முடித்து விடுவார்கள். வீண் வம்புக்கு வருவதில்லை, பொதுக் கூட்டங்களிலும் வம்பை இழுப்பதுபோல் பேசுவதில்லை. அவர்களுக்கு இட்ட பணியைச் செய்திருக்கிறார்கள். இவர்களுக்கு உள்ள இலாகாவின் பொறுப்பு குறைவானது. அவர்கள் மீனவர் சமுதாயத்திற்கு எந்தளவு சேவை செய்யவேண்டுமோ அதைச் செய்திருக்கிறார்கள் என்ற அளவில் அவர்களையும் பாராட்டுகிறேன். ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களில் பலர், நான் பேசுகிறபோது குறுக்கிட்டுப் பேசும் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டாலும் அது என்னை உற்சாகப்படுத்தவே என்று நினைத்துப் பேசி வந்திருக்கிறேன். அப்படி நான் அங்கத்தினர்கள், அல்லது அமைச்சர்கள் பேசும்போது குறுக்கிட்டுப் பேசியிருந்தால் அது அவர்களை உற்சாகப்படுத்தவே நான் பேசியிருக்கிறேன் என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். பெண் அங்கத்தினர்கள் 1952 தேர்தலைவிட 1957-ல் அதிகப் பேர்கள் வந்திருக்கிறார்கள். வந்த சில பெண் அங்கத்தினர்கள் வந்த புதிதில் சூடாகப் பேசி வந்திருந்தாலும் பிறகு படிப்படியாக எல்லாம் சரியாகிற முறையில், அமைதிக்குப் பங்கம் வராத முறையில் பேசி சபையின் கௌரவத்தைக் காப்பாற்றியிருக்கிறார்கள். அவர்களுக்கும் எனது பாராட்டுதல்களும், வாழ்த்துக்களும் உரியது. வருகிற தேர்தலிலும் பெண் அங்கத்தினர்கள் கூடுதலாக வரவேண்டுமென்று பெண் அங்கத்தினர்களை அதிகமாக போட முயற்சி எடுத்திருக்கிறார்கள். அது வரவேற்கத் தக்கது. பெண் அங்கத்தினர்கள் ஆரம்ப காலத்தில் சூடாகப் பேசி அதற்கு நாங்கள் சூடாகப் பதில் சொல்லியிருந்தாலும் குடும்பத்தில் ஏற்படுகிற சிறிய சண்டை சச்சரவு மாதிரி நினைத்து அவைகளை மறந்து வெளியே செல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள் அப்படிச் சூடாகப் பேசியதற்குக் காரணம் நிதியமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள்தான். ஒரு பாராட்டுக் கூட்டத்தில் பேசும்

15th December 1961] [Sri A. Govindasamy]

போது, எங்கள் பெண் அங்கத்தினர்கள் முன்னேற்றக் கழகத் தினரை அடக்கி விடுவார்கள் என்று சொன்னார்கள். அதனால்தான் அவர்கள் அப்படிப் பேசினார்கள். அடுத்து, எங்கள் கட்சியாக யிருந்தாலும், ஜனநாயக காங்கிரஸ்ஸாகயிருந்தாலும், கம்யூனிஸ்ட் கட்சி, சோஷியலிஸ்ட் கட்சி, பிரஜா சோஷியலிஸ்ட் கட்சி, மற்ற சுயேச்சை உறுப்பினர்கள் ஆகியவர்கள் குறைந்த எண்ணிக்கையில் இருந்தாலும், வோட்டு எடுக்கும்போது பல பல நேரங்களில் எங்களைத் தனியாக விடுகிற நிலை ஏற் பட்டாலும், பல தடவை ஒன்றுபட்டு நின்று, மேடையில் ஒருவரை ஒருவர் தாறுமாறாக பேசுவதுபோல் இல்லாது இச் சபையின் கௌரவம் காப்பாற்றப்பட்டிருக்கிறது. அடுத்தபடி யாக, கடந்த பத்து ஆண்டுகளில் சபாநாயகர் அவர்களின் உத்தர வின் பேரில் எந்த ஒரு அங்கத்தினரையும் இடத்தை விட்டு வெளியே பெயர்க்கிற நிலை இந்த மன்றத்தில் ஏற்படவில்லை. அந்தப் பெருமை நமது தமிழகத்திற்கு ஏற்பட்டிருப்பது, அதன் முழுப் பெருமையும் சபாநாயகர் அவர்களைத்தான் சாரும். கடைசியாக நேற்று நான் அவையில் இல்லாதிருந்தமைக்கு வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் சொன்னதாக பத்திரிகைகளில் படித்தேன். தேர்தலில் பணம் கொடுத்து வோட்டு வாங்கக் கூடாது, பணம் சம்பாதிக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு கொடுக்கிறார்கள் என்று சொன்னதாகப் பார்த் தேன். இந்த அவையில் மட்டுமல்ல, நாடு பூராவும் சொல்லி அவர் களது தொகுதியிலும் சொல்லி, பணம் கொடுப்பவர்களுக்கு வோட்டு போடாதீர்கள் என்று நாட்டில் அதைப் பரப்பினால் ஏசுநாதரைப் போன்று நல்ல காரியத்தைச் சொன்னார் என்ப தோடு, நல்லதொரு சம்பிரதாயத்தை ஏற்படுத்தவேண்டும். இந்த அவையில் சொன்னதை நாட்டு மக்கள் படித்துப் பார்த்திருப்பார் கள். இப்படியொரு நல்ல காரியத்தை மந்திரியே சொல்லி விட்டார் என்ற சூழ்நிலை ஏற்படவேண்டும். எந்தக் கட்சிக்காரர் கள் பணம் கொடுத்தாலும் போலீஸ் திறமையாக அவர்களை கையும் மெய்யுமாக பிடித்து தண்டிக்க வேண்டுமென்று சொல்லப் பட்டது. அப்படியே செய்யவேண்டும். ஒன்று கூற விரும்பு கிறேன். மதுராந்தகத்தில் முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர் களையும், சோஷியலிஸ்ட் கட்சியைச் சார்ந்தவர்களையும் சிலரை ரௌடி லிஸ்டில் சேர்த்து வைத்திருக்கிறார்கள். சட்டசபைக்கு நிற்கும் தகுதியுடையவர்களுக்கே இந்தப் பட்டப் பெயர் சூட்டப் பட்டிருக்கிறது. அந் நிலையைத் தவிர்க்க கடைசி நேரத்திலாவது நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதோடு, யார் யார் வாக்காளர் களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்பப்படுகிறார்களோ அவர்கள் வரட்டும் என்று நினைத்து நாம் மகிழ்ச்சியோடு விடைபெறுவோம் என்று கூறிக்கொண்டு எனது வணக்கத்தைத் தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

**Sri P. S. CHINNADURAI:** மதிப்புக்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, 10-30 மணிக்கே—10-30 மணிக்கு முன்னதாகவே—இந்த மசோதாவின் பேரில் ஒரு முடிவு செய்யப்பட்டுவிடும் என்று நான் எதிர்பார்த்தேன்—விவாதம் இல்லாமலேயே. எப்படியோ விவா தம் துவக்கி வைக்கப் பட்டிருக்கிறது. 12 மணி வரையில் இராகு

[Sri P. S. Chinnadurai] [15th December 1961

இருக்கிறது என்று நினைக்கிறேன். அந்த இராகு காலத்தை ஓட்டத்தான் எல்லா மெம்பர்களும் எழுந்து சற்று அதிக நேரம் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்று நான் எண்ணுகிறேன். நானும் அதனை ஓட்டிவிட என்னால் இயன்ற வரையில் துணை புரிய முடிவு செய்திருக்கிறேன்.

கடந்த ஐந்து ஆண்டு காலத்தில் நம் சபையானது மிகச் சிறப்புற நாட்டிலேயுள்ள இதர சட்ட சபைகளைக் காட்டிலும்—மிகவும் கௌரவத்தோடும், கண்ணியத்தோடும் நடந்து வந்திருக்கிறது. நடவடிக்கைகளை எல்லோரும் மெச்சத் தக்க வகையில் நடத்தியிருக்கிறோம் என்று நாம் மிக உறுதியாகத் தலை நிமிர்ந்து சொல்லிக்கொள்ளும் ஒரு நிலைமைதான் இருக்கிறது. வெவ்வேறு ராஜ்ய சபைகளில் எதிர்க்கட்சித் தரப்பில் தங்கள் கட்சிக் கருத்துக்களை எடுத்துச் சொல்ல பல வகை முறைகளைக் கையாண்டாலும், இந்த ராஜ்ய சட்ட சபையைப் பொறுத்த வரையில் எதிர்க் கட்சிகளெல்லாம் மிகப் பொறுப்போடு, மிகுந்த கண்ணியத்தோடு, தமிழனுக்கே உரிய தனிப் பண்பாட்டோடு, கருத்துக்களை எடுத்துச் சொல்லி வந்திருக்கின்றன. வெவ்வேறு வகையான பார்லிமெண்டரி சம்பிரதாயங்களுக்கு ஒவ்வாத முறைகளைக் கையாள ஒரு போதும் துணிந்ததில்லை. எவ்வளவோ கடுமையான சந்தர்ப்பங்கள் நேரிட்டாலும் அந்த சந்தர்ப்பங்களிலே எதிர்க் கட்சிகள் மிகப் பொறுப்போடு நடந்து வந்திருக்கின்றன என்று இந்த நேரத்தில் மிகக் குறிப்பாக எடுத்துக் காட்ட விரும்புகிறேன். பார்க்கப்போனால் பஞ்சபாண்டவர்கள் போல—பாரதத்திலே மிகப் பெரிய மதிப்பு அவர்களுக்குத் தான் உண்டு, பொறுமை நடத்தை இவைகளைப் பார்க்கும்போது, பஞ்சபாண்டவர்களுக்குத் தான் அதிகமான மரியாதை பாரதத்தில் அளிக்கப்பட்டிருக்கிறது. அவ்வகையிலே நானும் கருதுகிறேன்—எதிர்க் கட்சிகளெல்லாம் பஞ்சபாண்டவர்களைப் போல நடந்து வந்திருக்கிறார்கள் (சில குரல்கள் : திரௌபதி யார் ?) திரௌபதி யார் என்று கேட்கிறார்கள்—நாட்டு நலன் தான் திரௌபதி. இந்தப் பகுதியிலே, ஐந்து பிரதானத் தலைவர்கள் பஞ்சபாண்டவர்களாகத்தான் எதிர்க்கட்சி நடவடிக்கைகளைத் துவக்கினார்கள். இப்போது ஐந்து ஆறாகி, ஆறு ஏழாகி இருக்கலாம். ஆனால் துவக்கத்தில் ஐந்து பிரதானத் தலைவர்கள் தான் எதிர்க் கட்சிகளில் இருந்து வந்தார்கள் என்பது சபை நடவடிக்கைகளைக் கவனித்து வந்திருக்கின்றவர்களுக்கு ஞாபகம் இருக்கும். எங்களுக்குள் தர்மர் யார், அர்ச்சுனன் யார், பீமன் யார், நகுலன் யார், சகாதேவன் யார் என்று தீர்மானித்துக்கொள்ளும் பொறுப்பை மக்களுக்கே விட்டு விடுகிறேன். ஆக, எப்போதும் பஞ்சபாண்டவர்களுக்குரிய பொறுப்பு உணர்ச்சியோடு பொறுமை உணர்ச்சியோடு எதிர்க் கட்சிகள் கடமைகளை நிறைவேற்றி வந்திருக்கின்றன. பாரதம் இன்னும் முடியவில்லை—எப்போது முடியுமோ தெரியாது. ஆனால் இதற்கு இடையில் உள்ள காலத்தில் தங்களுடைய பொறுப்பு உணர்ச்சியைச் சரிவரக் காட்டி, வீரத்துடன் நடந்து வந்திருக்கிறார்கள். இதனை அறிகின்ற மக்கள் உண்மையாக எதிர்க் கட்சிகளுக்கு வருகிற தேர்தலில் ஊக்கமும் ஆக்கமும் கொடுப்பார்கள் என்று நினைக்கிறேன்.

15th December 1961] [Sri P. S. Chinnadurai]

சபை நடவடிக்கையாகட்டும், சர்க்கார் நிர்வாகமாகட்டும், ஒரு வகையில் கடந்த ஐந்து ஆண்டு காலத்தில் போதுமான விறு விறுப்பு உணர்ச்சி இல்லாமல் தான் இருந்திருக்கின்றன என்பதை நான் நினைவுபடுத்த வேண்டும். ஏனென்ருல் ஆளும் கட்சியினர்—எந்தக் கட்சி ஆளும் கட்சி என்பதல்ல—கடந்த ஐந்து ஆண்டு காலத்தில் இருந்து வந்தவர்கள் மிக அதிகமாக இருந்த காரணத்தினுலும், எதிர் தரப்பில் இருக்கின்றவர்கள் அந்த அளவுக்கு ஈடு கொடுக்கத் தக்க முறையில் கணிசமான அளவில் இல்லாது இருந்த காரணத்தினுலும், இந்தச் சபையிலேயும், நாட்டு நிர்வாகத்திலேயும் போதுமான விறுவிறுப்பு உணர்ச்சி இல்லாமல் போய்விட்டது. இந்த விறு விறுப்பு உணர்ச்சி இல்லாமல் போய் விட்டதானது, பல உண்மைகளை, உண்மைகள் என்று மக்கள் உணர்ந்தாலும், அந்த உண்மைகளையெல்லாம் உண்மைகள் என்று நிரூபிக்க முடியாத சந்தர்ப்பங்கள் கடந்த காலத்தில் ஏற்பட்டன. அதே மாதிரி அரசாங்க நிர்வாகத் துறையிலும் அப்படித்தான். மக்கள் மதிக்கப் படுவதில்லை. எங்கு பார்த்தாலும் சிபாரிசு வேண்டியிருக்கிறது. எங்கேயும் சிபாரிசுக்குத் தான் மதிப்பு. ஆஸ்பத்திரியிலே நோயாளிகளைச் சேர்ப்பதிலிருந்து, பள்ளிகளில் மாணவர்களைச் சேர்ப்பதிலிருந்து, ரசாயன உரம் வாங்குவதிலிருந்து, பல வகை காரியங்களுக்கு, மக்கள் தங்கள் குடும்ப நடவடிக்கைகளை, வெளிப்படையாக மற்றவர்களுடன் நடத்தும் ஒவ்வொரு காரியத்திலும், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சிபாரிசு பிடித்து நடத்த வேண்டிய நிலைமை கடந்த ஐந்து ஆண்டு காலத்தில் ஏற்பட்டது ராஜ்யத்தின் துர்ப்பாக்கியம் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. என்னுடைய சிபாரிசிலும் பல காரியங்கள் நடந்திருக்கலாம்—அந்த மாதிரி பல அங்கத்தினர்களுடைய சிபாரிசிலும் பல காரியங்கள் நடந்திருக்கின்றன. இதில் அடிப்படை உண்மை என்னவென்ருல் சிபாரிசு மூலம் தான் காரியம் நடக்கும் என்ற நிலைமையை உண்டாக்கி விட்டோம். இன்றைய தினம் கிராம மக்களுக்கு தன்னம்பிக்கை போய்விட்டது. உண்மையை உண்மை என்று எடுத்துச் சொல்ல சிபாரிசு பிடிக்க வேண்டிய நிலைமை ராஜ்யத்தில் ஏற்பட்டிருப்பதற்கு மிக முக்கிய காரணம் ஆளும் கட்சியிலே எண்ணிக்கை அதிகமாகவும், எதிர்க் கட்சியிலே எண்ணிக்கை குறைவாகவும் இருப்பது தான். அதிகாரிகளுக்கு—ராஜ்யம் முழுவதிலும் உள்ள அதிகாரிகளுக்கு—மக்களிடத்தில் ஒரு வகையான பய பக்தி இல்லாமல், இப்போது மக்களுக்குத் தான் அரசாங்கம், மக்களுக்காகத் தான் சட்டங்கள், மக்களுக்காகத் தான் நிர்வாகப் பொறுப்பில் இருக்கிருர்கள் என்ற நிலைமை இல்லாமல், ஒரு வித அச்சம் ஏற்படும் நிலைமையும், அதிலிருந்து—செல்வாக்கிலிருந்து—தப்பித்துக்கொள்ள, தவிர்த்துக்கொள்ள ஏதாவது ஒரு வகையிலே சிபாரிசு பிடிக்க வேண்டிய கட்டமும் கடந்த ஐந்து ஆண்டுகளில் ஏற்பட்டிருக்கின்றது. கண்ணியமாக சபையை நடத்தினுலும், நல்ல முறையில் ராஜ்ய நிர்வாகத்தை நடத்தினுலும் உண்மையில் மக்களுக்குத் தன்னம்பிக்கை உணர்ச்சியை உண்டாக்கத் தவறி விட்டோம் என்று நான் சொல்ல விரும்புகிறேன். நாம் என்று சொல்லும்போது இந்தச் சபையைத் தான் குறிப்பிடுகிறேன்—இந்தச் சபையில் இருக்கும் எல்லோரையும் தான் குறிப்பிடுகிறேன்.

வருகிற தேர்தலில் எந்தக் கட்சி ஆளும் கட்சியாக வரப்போகிறது என்று இப்போதே சொல்லுவது சரியாக ஆகாது—வோட்டர்களை அவமானப் படுத்துவதாக ஆகும். எந்தக் கட்சி ஆளும் கட்சியாக வந்தாலும் நல்ல கணிசமான எதிர்க் கட்சி உருவாவது மிகவும் அவசியம் என்பதை என்னுடைய கடந்த ஐந்து ஆண்டு கால சட்ட சபை அனுபவம் உண்டாக்கியிருக்கிறது என்பதை மிகவும் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன். ஜனநாயகம் திறம்படச் செயல் பட வேண்டுமானால், ஜனநாயகம் மூலமாக மக்கள் உரம் பெற்ற வாழ்க்கையை நிம்மதியாக நடத்த வேண்டுமானால், நான் நினைக்கிறேன், நல்ல கணிசமான எண்ணிக்கையுள்ள எதிர்க் கட்சி இருப்பது மிகவும் அவசியமானது. முக்கியமாக ஆளும் கட்சியினர் இதை உணர்ந்தாக வேண்டும். நாளைக்கு நானே ஆளும் கட்சி தரப்பில் வந்தாலும், எதிர் கட்சியினர் அதிகமான அளவில் இருப்பது தான் நல்லது என்ற உணர்வோடு இருக்கவேண்டும் என்று எண்ணுகிறேன். அதற்கு கடந்த ஐந்து ஆண்டு கால அனுபவம் துணையாக இருக்கிறது என்று குறிப்பாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மற்றும் இந்த மசோதா சம்பந்தமாக இரண்டொரு வார்த்தைகளைச் சொல்லி முடித்துக்கொள்கிறேன். நீர்ப்பாசனத் திட்ட விஷயத்தில் நாம் இன்னும் அதிகமாக அக்கரை செலுத்த வேண்டுமென்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன். பரம்பிக்குளம் திட்டத்தைப் பொறுத்த வரையில் அதனைத் துரிதமாக நிறைவேற்ற எல்லா விதமான முயற்சிகளையும் அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டும். துரிதமாக நிறைவேற்றுவதோடு கூட, அந்தத் திட்டத்திலே சேராத இன்னொரு ஆறு இருக்கிறது. அந்த ஆற்று நீரையும் நம் ராஜ்யத்திற்குப் பயன்படுத்தத் தக்க முறையில் பேச்சு வார்த்தைகளைத் துவக்கி நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்தத் தண்ணீர் நம்முடைய பகுதிக்கு திருப்பப்படாமல் வீணாகிறது. அதைத் திருப்பி விட்டால் சுமார் 50,000 ஏக்கருக்கு பாசன வசதி கிடைக்குமென்று சொல்லப்படுகின்றது. பல இன்ஜினியர்கள் அப்படிப்பட்ட கருத்தை தனிப்பட்ட முறையிலே
12-00 noon தெரிவிக்கிறார்கள். ஆகவே, அந்த ஆற்று நீரை நம்முடைய ராஜ்யத்திற்கு பாசனத்திற்குத் திருப்பி விடுமாறு கேரள ராஜ்யத்தோடு பேச்சு வார்த்தைகள் நடத்தும்படியாக நம் சர்க்காரை நான் மிகவும் வேண்டிக் கொள்கிறேன்.

அதோடு, பவானி ஆற்றிலே வீணாகப் போகின்ற தண்ணீரைப் பயன் படுத்துவதற்கு சரியான ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். மேல்பவானித் திட்டம், கீழ்ப்பவானித் திட்டம் ஆகிய இரண்டு திட்டங்களைப் பொறுத்தவரையில், கீழ்ப்பவானித் திட்டம் மட்டும் தான் இப்போது நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதனாலே, மேல்பவானித் திட்டம் தேவையில்லை என்ற கருத்து இதுவரை தெரிவிக்கப்பட்டு வந்தது. நான் கேட்டுக் கொள்கிறேன், எல்லா என்ஜினியர்களையும் மீண்டும் ஒரு புனர் பரிசீலனை செய்து பார்க்கும்படி அவர்களை அரசாங்கம் கோர வேண்டுமென்று, மேல் பவானித் திட்டத்தின்

**15th December 1961]** [Sri P. S. Chinnadurai]

மூலம் அனுகூலமான பலன்கள் ஏற்படக்கூடும் என்று உறுதியாக நம்ப இடமிருக்கிறது. ஏராளமான தண்ணீர் கீழ்ப்பவானித் திட்டத்திலே பாசன வசதிக்குப் போக வீணுகப் போய்க் கொண்டிருக்கிறது. ஆகவே, இந்த மேல் பவானித் திட்டத்தை எடுத்துக் கொண்டு, கோயமுத்தூர் ஜில்லாவிலே உள்ள பல்லடம், அவுைசி போன்ற தாலுக்காக்கள் பயனடையும்படியான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று மிகவும் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். தவிர ஏராளமான குளங்கள் தூர் எடுக்கப்படாமல், வண்டல் மேடிட்டு அதனுல் பாசன வசதிக்கு அதிக அளவில் பயன்படாமல் நம்முடைய ராஜ்யத்திலே இருக்கின்றது என்பது கனம் மராமத்து அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். எவ்வளவோ சிறப்பானத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு நாம் கடந்த காலத்திலே முயற்சி எடுத்துக்கொண்டாலும், இந்த வண்டல் மண்ணை அப்புறப்படுத்தி, இந்தக் குளங்களையெல்லாம் ஆழப்படுத்தி, அவைகளிலே போதுமான அளவிற்கு தண்ணீர் வருவதற்கான ஏற்பாடுகளை திறமையாகவும், விரிவாகவும் செய்யவேண்டியது மிகவும் அவசியமாகும். நம் ராஜ்யத்திலே கணக்கெடுத்தால் சுமார் 30,000 குளங்கள் இருக்குமென்று நினைக்கிறேன். அப்படி இருப்பதில் இப்போது சுமார் 10-ல் ஒரு பங்கு அளவுக்குக்கூட தூரெடுக்க வழிவகை செய்யப்படவில்லை என்று நினைக்கிறேன். மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தை எடுத்துக் கொண்டாலும், மேற்கொண்டு 3,000, 4,000 குளங்களுக்குத் தான் தூரெடுக்க திட்டமிடப்பட்டுள்ளது. இப்படி தூரெடுப்பதானுல் மொத்த குளங்களையும் தூரெடுப்பதற்கு 40, 50 ஆண்டுகள் ஆகும். அதற்குள் மற்றவைகளிலே வண்டல் படிந்துவிடும், மறுபடியும் தூரெடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும். ஆகவே, இதுவிஷயத்திலே இன்றையத் தினம் அதிக கவனம் செலுத்தி இன்னும் அதிகமான குளங்களுக்கு, அதாவது இப்போது 4,000 என்று திட்டமிடப் பட்டுள்ளதற்குப் பதிலாக, 10,000 குளங்களுக்கு குறைந்தபட்சம் இந்த வருகின்ற நான்கைந்து ஆண்டு காலத்துக்குள்ளாக தூரெடுத்து, ஆழப்படுத்தி தண்ணீர் விடுவதற்கான முயற்சிகளை எடுத்துக் கொள்ள, வேண்டுமென்று சர்க்காரை நான் மிகவும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். இருக்கிற வசதிகளை பூரணமாக பயன்படுத்திக் கொள்வதிலே நாம் அக்கறை செலுத்த வேண்டும். இருக்கிற வசதிகளைப் பயன்படுத்தாமல் விட்டு, அதனுல் மக்களுடைய முயற்சியையும் வீணடிக்கக் கூடாது என்றுதான் நான் கூற விரும்புகிறேன். ஆகவே, நீர்ப்பாசன விஷயத்திலே பெரு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இந்த நேரத்திலே தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தச் சபையின் சபாநாயகராக இருந்து, சபையின் கண்ணியத்தைக் காப்பதிலே பெரும் துணைபுரிந்து, நல்ல வழிகாட்டியாக விளங்கிய டாக்டர் ய. கிருஷ்ண ராவ் அவர்கள் மறைந்து விட்டது உண்மையிலேயே மிகவும் துக்ககரமான ஒரு சம்பவமாகும். இருந்தபோதிலும், எதுவும் நம் கையிலே இல்லை என்ற அளவிலே அவர்கள் இயற்கை எய்திய செய்தியை நான் வெளி நாட்டிலே இருந்தபோது, கேட்டு மிகவும் துயரம் அடைந்தேன். அப்பேர்ப்பட்ட ஒரு சிறந்த தேச பக்தரை இழந்ததற்காகவும்,

இந்தச் சபை கலைகின்றபோது அவர்கள் இல்லாமல் போய்விட்டதற்காகவும், இந்த நேரத்திலே நான் உண்மையிலேயே மனம் வருந்துகிறேன். அதேபோல் சிறந்த தேசபக்தரும், தமிழ் நாட்டிலே பீஷ்மரைப் போன்று இருந்தவருமான சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் மறைந்துவிட்டார்கள். அதுவும் மிகவும் கவலை தரக்கூடிய செய்திதான். அதுவும் வெளிநாட்டிலே இருந்தபோது, கனம் நிதி அமைச்சர் அவர்கள் மூலமாகக் கேட்டு, மிகவும் வருத்தம் கொண்டேன் என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சிறந்த தேசபக்தர்கள் நம்மிடையே இருந்து மறைந்து கொண்டு வருவதையும், புதிய தலைமுறையினர் எழுந்து கொண்டிருப்பதையும் நாம் காண்கின்றோம். பல புதிய பொறுப்புக்களை வகிக்கக்கூடிய புதிய தலைமுறையினருக்கும், தலைவர்களுக்கும் ஆண்டவன் போதிய பலத்தையும், ஆயுளையும் அருளவேண்டுமென்று நான் பிரார்த்தனை செய்து கொள்கிறேன்.

இந்தச் சபை இன்றோடு கலைகிறது. இந்த கட்டத்திலே கனம் உதவி சபாநாயகர் அவர்களுக்கு என்னுடைய அன்பையும், மரியாதையையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன். என் கட்சியின் சார்பாகவும் தெரிவித்துக்கொள்கிறேன். எனது கட்சியிலே இரண்டு பேர்கள் தான் இருப்பதாக அடிக்கடி சற்று அவமானப்படும் முறையிலே சுட்டிக்காட்டப்பட்ட நேரத்திலேகூட, நாங்கள் அதைக் கண்ணியமாகவே கருதி, இரண்டு பேர்களாக இருந்த போதிலும், சபைக்கு கூடுமான வரையில் அதிக நாட்கள் வந்து, சபையின் நடவடிக்கைகளிலே பங்கு கொண்டு பொறுப்புக்களை சரிவர நிறைவேற்றி இருக்கிறோம். அதுபோல் ராஜ்ய நிர்வாகப் பொறுப்பிலேயும் நாங்கள் சரிவர பங்கெடுத்துக்கொண்டிருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இரண்டு பேர்கள் என்று சபையிலே குறிப்பிட்டாலும், தனிப்பட்ட முறையிலே அமைச்சர்களை அவரவர்கள் அறையிலே சந்தித்து, மக்கள் பிரச்சனைகளை அவர்களிடத்திலே முறையிட்டு, அவர்களும் ஓரளவுக்கு அவைகளை அனுதாபத்தோடு கவனித்து, அவ்வப்போது நல்லது என்று உணர்ந்து, காரியங்களைப் புறக்கணிக்காது ஓரளவுக்கு நன்மைகள் செய்து வந்திருக்கிறார்கள். பொதுவாக இது இருந்தாலும், குறிப்பாக இதிலே விவசாயத் துறை அமைச்சர் அவர்களுக்கும், தொழிலாளர் துறை அமைச்சர் அவர்களுக்கும் என்னுடைய கட்சியின் சார்பிலே நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, இந்த சமயத்திலே ஆளும் கட்சியிலே உள்ள அங்கத்தினர்களுக்கும், எதிர்கட்சியிலே உள்ள அங்கத்தினர்களுக்கும் எனது கட்சியின் சார்பாக வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு, என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : சட்டமன்ற துணைத் தலைவர் அவர்களே, இந்தச் சபையின் இந்தக் கட்டத்தின் இறுதி நாளாகிய இன்று பல்வேறு கட்சியைச் சேர்ந்தவர்கள் இந்த விவாதத்திலே கலந்து கொண்டார்கள். இந்தச் சபையிலே நடைபெறுகின்ற விவாதங்களை நாம் குறிப்பாகப் பார்ப்போமானால், எதிர்த்தாப்பிலே உள்ளவர்கள் பெரும்பாலும் தங்கள் குறைகளை எடுத்துக் கூறுகின்ற பழக்கமும், அதே நேரத்திலே அந்தத் தாப்பிலே

15th December 1961] [Sri M. P. Subramaniam]

உள்ளவர்கள் எதிர்க்கட்சியிலே உள்ளவர்கள் எப்போதும் குறைகளைத்தான் சொல்வார்கள் என்று குறைப்பட்டுக் கொண்டதையும் பல நேரங்களிலே பார்த்திருக்கிறோம். ஆனால், இந்த நேரத்திலே என்னுடைய நினைவிற்கு ஒன்று வருகிறது. நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சபையிலே இல்லாத நேரத்தில், தொழில் அமைச்சர் அவர்கள் ஒரு நாள் விவாதத்தில் பதில் அளித்ததில் சொன்னார்கள். எதிர்க் கட்சியிலே உள்ளவர்கள் குறைகளை எடுத்துச் சொல்வார்கள். ஆனால் ஆளும் கட்சியிலே உள்ளவர்கள் நன்மைகளை செய்துகொண்டு வருவார்கள் என்று குறிப்பிட்டார்கள். ஆகவே, இந்தத் தரப்பிலே உள்ளவர்கள் குறைகளை எடுத்துச் சொல்வதாக, எங்கள் கடமையை நாங்கள் செய்வதாக அவர் சொல்கிறாரே தவிர, வேறு ஒன்றும் தவறாகச் சொல்லவில்லை. நான் இப்படிச் சொல்வதால் ஏதோ ஆளும் கட்சியை குற்றவாளிக் கூண்டிலே அமர்த்த வேண்டுமென்ற மனப்பான்மையிலே இதைச் சொல்லவில்லை என்பதையும் இந்த நேரத்திலே நான் குறிப்பிட விரும்புகிறேன். இங்கே வேறுபட்ட, மாறுபட்ட கருத்துக்களையும், கொள்கைகளையும் உள்ள பல்வேறு கட்சிகள் இருக்கின்ற காரணத்தினாலே, எல்லாப் பிரச்னைகளையும் ஒருமித்து நடத்திச் செல்ல முடியுமென்று நாம் நினைப்பதற்கில்லை. அப்படி இருக்குமானால், நாம் ஒரே கட்சியாக இருக்கலாம். அப்படியிருந்தால், கொள்கையிலேயும் ஒன்றுபட்டிருக்க முடியும். அப்படியில்லாமல், வேறுபட்ட அடிப்படையிலே இன்றைக்கு இருப்பதால், அப்போதைக்கப்போது பல பிரச்னைகளிலே, கொள்கைகளிலே அடிப்படையில் வேறுபட்டிருந்தாலும்கூட, பொதுவாக எல்லோருக்கும் இந்த தமிழகத்தின் முன்னேற்றத்தில் அக்கறை இருந்திருக்கிறது, இருந்து வருகிறது என்பதிலே நாம் மனசுத்தியாக சந்தேகிக்க வேண்டிய அவசியமில்லை. நம்முடைய கடமையை நாம் செய்திருக்கிறோம் என்பதை இந்த நேரத்திலே குறிப்பிட விரும்புகிறேன். இன்றையத் தினம், கடந்த ஐந்தாண்டு காலத்திலே, பத்தாண்டு காலத்திலே இந்தச் சபையிலே சொல்லிவந்த குறைகளைப் பற்றி நான் சொல்லப் போவதில்லை. அதைப்பற்றி பல நேரங்களிலே கொள்கை அடிப்படையில் பேசியிருக்கிறேன். என்னைப் பொறுத்தவரையில் இந்த நேரத்திலே சில முக்கியமான நல்ல அம்சங்களை மட்டும் நான் குறிப்பிடுவது மிகவும் பொருத்தமாக இருக்குமென்று நினைக்கிறேன். இந்தச் சபையைப் பொறுத்த மட்டில், இந்தச் சபையின் விவாதத்திலும் சரி, இந்தச் சபையிலே வீற்றிருக்கக்கூடிய அங்கத்தினர்களின் எண்ணிக்கையைப் பார்த்தாலும்கூட, இந்தச் சபையோடு ராஜ்ய சபை போன்றவற்றை ஒப்பிட்டுப் பார்க்கும்போது,. அட்டண்டன்சிலே நாம் மிகவும் நல்ல முறையிலே, நல்ல எண்ணிக்கையிலே இருந்திருக்கிறோம் என்பது எனது திடமான எண்ணமாகும். பாராளுமன்றத்திலே அங்கு இருக்கின்ற அங்கத்தினர்களின் எண்ணிக்கை 500-க்கு மேற்பட்டிருந்தாலும்கூட, பல நேரங்களிலே கோரம்கூட இல்லை என்பதை செய்தித்தாள் மூலமாகக் கேள்விப்பட்டிருக்கிறோம். நேரில் பல சமயங்களில் பார்த்தும் இருக்கிறோம். அந்த வகையில் ஒப்பிட்டுப் பார்த்தால், இந்தச் சபையில் உள்ள உறுப்பினர்கள் தங்களுடைய கடமையை நல்ல முறையில் செய்ய

வேண்டும் என்ற பொறுப்பு உணர்ச்சி மிகுதியாக உள்ளவர்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. அதுபோலத்தான் விவாதங்கள் நடக்கும்பொழுது வேறு சில ராஜ்யங்களில் பல நிகழ்ச்சிகள் நடந்திருப்பதைப் பார்க்கிறோம். விவாதத்தின்பொழுது ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்ளுவது, தாறுமாறாக பேசிக்கொள்ளுவது, அடிக்கடி எதிர்க்கட்சியினர் வெளியேறுவது போன்ற தகராறுகள் நடந்திருப்பதைப் பார்க்கும்பொழுது, இந்த 10 ஆண்டு காலத்தில் நிச்சயமாக அம்மாதிரி நிகழ்ச்சிகள் ஒன்றும் இங்கே கண்டிருக்க முடியாது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அதற்குத் துணையாக இருந்தது எல்லா உறுப்பினர்களும். எல்லோருக்கும் அதில் பங்கு உண்டு. விவாதத்தின் தரம் நிச்சயமாக உயர்ந்த அளவில் இருந்திருக்கிறது என்பதையும் நாம் மறுப்பதற்கில்லை. இதற்கு எல்லாம் உறுதுணையாக இருந்தது சபையை நடத்திவந்த சபாநாயகர் அவர்களும், மற்ற தலைவர்களும் என்பது ஒரு புறம் இருக்க, இந்தச் சபையின் செகரடேரியட் பணியாளர்களுடைய திறமையும் காரணம் என்பதை நாம் மறுப்பதற்கு இல்லை. 1952-ல் புதியதாகத் தேர்தல் நடைபெற்று அந்த சட்டசபை ஏற்பட்ட காலத்தில் அப்பொழுதிருந்த செகரடேரியட்டிற்கும், இப்பொழுது உள்ள அலுவலகத்திற்கும் வித்தியாசம் இருக்கிறது, வெகுவாக மாறுபட்டிருக்கிறது என்று நான் நிச்சயம் கருதுகிறேன். ஒவ்வொரு உறுப்பினரும் தங்களுடைய கடமையைச் செய்வதற்கு என்ன துணை வேண்டுமானாலும், உதவி வேண்டுமானாலும், அந்த உதவியைச் செய்வதற்கு, சேவையை செய்வதற்கு எப்பொழுதும் தயாராக உள்ள அளவிலே அசெம்பிளி செகரட்டேரியட் இருக்கிறது. எங்களைப் போன்ற இளைஞர்கள் அந்த உதவியை முழு அளவிலே பயன்படுத்திக் கொள்ளவில்லை. எப்பொழுது, எந்த உதவியைக் கேட்டாலும், கட்சி சார்பற்று, கருத்து வேறுபாடு இல்லாமல், எந்த விதத்திலும் எப்பொழுதும் உதவி செய்யத் தயாராக இருக்கிறார்கள். பொதுவாக நீதி இலாகா எப்படி ஒரு 'இண்டிபெண்டெண்டு பாடி' யாக பணி புரிகிறதோ அம்மாதிரி சட்டசபை செயலகமும் ஒரு தனி சுதந்திரத்துடன் இருக்கவேண்டும். இப்பொழுது ஓரளவுக்கு சுதந்திரம் இருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டாலும், முழுவதும் சுதந்திரமாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் கட்சி மனப்பான்மையில்லாமல், ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என்று மனதில் வேறுபாடு இல்லாமல் தங்களுடைய கடமைகளை இன்னும் நல்ல முறையிலே செய்வதற்கு வசதியாக இருக்கும் என்ற எண்ணத்தையும் நான் இந்த நேரத்திலே குறிப்பிட விரும்புகிறேன்.

பொதுவாக அமைச்சர் அவைபற்றி நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். எத்தனையோ அமைச்சர்கள் இதற்கு முன்பு இருந்திருந்தும்கூட இப்பொழுது நல்லதோர் மாற்றத்தை இந்த அமைச்சர் அவையில் காண்கிறோம். இதற்கு முன்பு அமைச்சராக வந்துவிட்டபிறகு, அரசாங்க காரியங்களைப் பற்றி சென்னையிலே இருந்துகொண்டு செகரட்டேரியட்டில் இருந்துகொண்டு, பத்திரிகை நிருபர்களை வரவழைத்து பிரச்னைகளை விமர்சனம் செய்வதும், சர்ச்சை செய்வதும் வழக்கம். ஆனால் அந்த

15th December 1961] [Sri M. P. Subramaniam]

நிலை இப்பொழுது அடியோடு மாறி, அமைச்சர்களாக இருப்பவர்கள் தேர்தல் காலத்தில்தான் மக்களைச் சந்திப்பது என்பதில்லாமல் சாதாரண காலத்திலும் மக்கள் மத்தியிலே செல்லவேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டிருப்பது உண்மையிலேயே வரவேற்கத்தக்கக்கூடிய அம்சம். அரசியல் வேறுபாடு இருக்கிற காரணத்தினால், மற்றவர்களே சொல்லக்கூடும் ஆளும் கட்சியினர் கட்சி கண்ணோட்டத்தோடு மக்களை காக்காய் பிடிப்பதற்காக இம்மாதிரி அடிக்கடி சுற்றிக்கொண்டிருக்கிறார்கள் என்று. எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் சரி, கட்சி நலனில் அக்கரை இல்லாமல் இருக்க முடியாது. கட்சி அரசாங்கம் நடக்கிற ஆட்சியில் அம்மாதிரி தான் வேறு, கட்சி வேறு என்று அக்கறை இல்லாமல் இருக்க முடியாது. அந்த வகையிலே நாட்டு மக்களிடத்திலே கிராமப்புறத்திலே சென்று சுற்றுப் பிரயாணம் செய்தால் மந்திரிகள் அம்மாதிரி செய்வது மகாபாதகம் என்று சொல்லுவதற்கில்லை. அது வரவேற்கத்தக்க அம்சம்தான். இன்று தேர்தல் காலத்தில் மட்டும்தான் மக்களை சந்திப்பது என்ற முறை அடியோடு மாறி, இன்று நாட்டு மக்களை அமைச்சர்கள் அடிக்கடி சந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். திரு. காமராஜ் அவர்கள் முதல் அமைச்சர் பொறுப்பு ஏற்றுக்கொண்ட பிறகு, சட்டசபையில் முதல் அமைச்சர் அவர்கள் திறம்பட செயலாற்றவில்லை என்று குறை இருந்தபோதிலும், நாட்டு மக்களைப் பொறுத்தவரையில், அவர்களுடைய எண்ணத்தையும், சேவையையும் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அமைச்சர் அவையில் இருக்கும் அத்தனை பேர்களும் விருப்பு, வெறுப்பின்றி கண்யமாக வேலை செய்கிறார்கள். ஒவ்வொரு அமைச்சரைப் பற்றியும் தனித்தனியாக விமர்ச்சிக்க அவசியம் இல்லை, தேவையில்லை. ஒன்றுமட்டும் நான் உறுதியாக சொல்லுகிறேன். எந்த ராஜ்ய அரசாங்கத்தை ஒப்பிட்டுப் பார்த்தாலும், மத்திய அரசாங்கத்தை ஒப்பிட்டுப் பார்த்தாலும், திறமையிலும் சரி, நாணயத்திலும் சரி, இந்த அமைச்சர் அவையில் இடம் பெற்றிருப்பவர்கள் எல்லோரையும் விட உயர்ந்தவர்கள் என்று சொல்லுவதில் இரண்டு விதமான கருத்து இருக்க முடியாது. இத்தகைய சிறந்த அம்சங்களை ஜனநாயகத்தில் எல்லா ராஜ்யங்களும் பின்பற்றவேண்டும். இதை நான் முகஸ்துதிக்காக சொல்லவில்லை. வேறு யாரையும் திருப்திப்படுத்த வேண்டும் என்பதற்காகவும் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. நாட்டு மக்களை அடிக்கடி சந்தித்து, அவர்களுடைய பிரச்னைகளை தெரிந்துகொண்டு, அந்தப் பிரச்னைகளை தீர்த்துவைப்பதில் அக்கறை காட்டி, திறமையுடனும், நாணயத்துடனும், கண்யத்துடனும் அமைச்சர்களாக இருப்பவர்கள் எல்லோரும் நடந்து கொள்ளவேண்டும் என்ற மனோநிலை எல்லோருக்கும் ஏற்படவேண்டும் என்பதுதான் என்னுடைய அவா.

இந்த ஐந்து, பத்து ஆண்டுகளில் இந்தச் சபையினுடைய கௌரவத்தை நல்ல முறையில் பாதுகாக்க எல்லா சபாநாயகர்களும் துணை புரிந்திருக்கிறார்கள். அதுபோலவே துணைச் சபாநாயகர், துணைச் சபாநாயகராக இருந்து தலைமை தாங்கி, இப்பொழுது சபாநாயகராக இருந்து தன்னுடைய கடமையை

நல்ல முறையில் நிறைவேற்றி, இந்தச் சபையின் கௌரவத்தையும், கண்யத்தையும் காப்பாற்றி நல்ல முறையில் தொண்டு செய்திருக்கிறார் என்பதை நாம் நிச்சயமாக மறுப்பதற்கில்லை. ஆகவே, இந்தச் சபையை நல்ல முறையில் நடத்திச் சென்ற சபாநாயகர் அத்தனை பேர்களுக்கும், இந்தச் சபையிலே உள்ள உறுப்பினர்கள் எல்லோருக்குமே, என்னுடைய பாராட்டுதலையும் நன்றியும் தெரிவித்து, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri C. N. ANNADURAI** : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த ஐந்தாண்டுகள் எவ்வளவு சீக்கிரம் உருண்டு ஓடிவிட்டன என்று இந்தச் சபையிலே வீற்றிருக்கிற எல்லா அங்கத்தினர்களும் நிச்சயமாக எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். நேற்றைய தினம் நான் இந்த மன்றத்தில் நுழைந்தபோது டாக்டர் கிருஷ்ணாராவ் அவர்களுடைய குழந்தை உள்ளத்தை பிரதிபலிக்கின்ற இன்ப முகத்தை பார்த்துக்கொண்டிருப்பது போல தோற்றியது. ஐந்து ஆண்டுகள் உருண்டு ஓடிவிட்டன. இந்த ஐந்து ஆண்டுகளில் நாம் இந்த மன்றத்தில் இருக்கிற உறுப்பினர்கள் ஒருவருக்கு ஒருவர் ஏற்படுத்திக்கொண்டிருக்கிற பழக்கங்கள், அவரவர்கள் தங்களுடைய குடும்பத்தில் இருக்கிறவர்களைப்பற்றி எண்ணுவதைவிட அதிக அளவுக்கு இங்கே உள்ளவர்களைப்பற்றி எண்ணிக் கொண்டிருக்கக்கூடிய அளவுக்கு, நல்ல தொடர்பு இந்த மன்றத்திலே கட்சி அங்கத்தினர்களுக்குள்ளே ஏற்பட்டிருக்கிறது. அந்த தொடர்பு காரணமாக, ஒருவரை ஒருவர் கட்சிக் கொள்கையின் அடிப்படையிலே குறை கூறிக்கொண்டாலும்கூட, யாரும் கவனிக்கப்படத்தக்கவர் அல்ல என்ற முறையில் அல்லாமல், அங்கத்தினர்கள் நல்ல விதத்தில் ஒருவரை ஒருவர் அறிமுகப்படுத்திக்கொண்டு ஐந்து ஆண்டுகளாக இந்த மன்றத்தினுடைய அலுவல்களிலே ஈடுபட்டு நாம் நல்ல பணியாற்றுகிறோம் என்று அவரவர்களும் தங்கள் தங்கள் நோக்கத்தின் வழியிலே நினைத்துப் பார்த்து, மதிப்பீடுகளை எடுத்துத் தருகிற கட்டத்திற்கு நாம் இன்றைய தினம் வந்திருக்கிறோம். இதிலே ஆளும் கட்சியைச் சார்ந்த அமைச்சர்களை, எதிர்த்தரப்பில் உள்ளவர்கள், கட்சித் தலைவர்கள், கட்சியில் உள்ள முக்கியஸ்தர்கள், அங்கத்தினர்கள் பாராட்டிப் பேசுவது என்பது உள்ளபடியே பாராளுமன்ற ஜனநாயக முறையின் பண்பாகும். ஆனால், அதுகூட வேறு காரணங்களுக்காக பயன்படுத்திக்கொள்ளப்படுகிறது என்பதை நான் உணராமல் இல்லை. இருந்தாலும் கூட, பாராளுமன்ற ஜனநாயகப் பண்பின்படி இருக்கிறது இது. ஆட்சியில் உள்ளவர்கள், அமைச்சர்கள், இவர்களைப் பற்றி இந்த மன்றத்தில் எடுத்துப் பேசுவது மட்டுமல்ல, வெளி மாநிலத்திலேயும் என்னை பத்திரிகை நிருபர்கள் ஒரு 10 நாட்களுக்கு முன்பாக சந்தித்துக் கேட்ட நேரத்திலும், நான் சென்னை ராஜ்யத்தில் இருக்கிறேன், ஆட்சியாளர்களிடத்தில் எனக்கு இருக்கிற குறைகள் மூன்று என்பதை தெளிவாக எடுத்துச் சொன்னேன். ஒன்று, அவர்களுடைய நிர்வாகத்திலே மதமதப்பும், மந்தமும் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இரண்டு,

15th December 1961] [Sri C. N. Annadurai]

மாநில ராஜ்யத்தினுடைய உரிமைகளை பாதுகாக்க போதுமான அளவுக்கு அவர்கள் வலிவு தேடிக்கொள்ளுவதில்லை. மூன்றுவதாக, அவர்கள் தனியார் துறையை வளர்க்கிற அளவுக்கு, பொதுத் துறையை வளர்க்கவில்லை. இம்மாதிரி மூன்று குறைபாடுகள் எங்களுடைய ராஜ்ய சர்க்காரிடத்திலே இருக்கின்றன என்று நான் அவர்கள் கேட்டதற்கு எடுத்துச் சொன்னேன். 'கரப்ஷன்' ஊழலைப்பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள் என்று என்னை கேட்ட நேரத்தில், 'மத்திய சர்க்கார் பற்றி வருகிற புகார்களையும் மற்ற ராஜ்ய சர்க்கார்கள் பற்றி வருகிற புகார்களையும் வைத்துக்கொண்டு ஒப்பிட்டுப் பார்த்தால், எங்கள் ராஜ்ய சர்க்கார் தங்கம்' என்று நான் சொன்னேன். அதே கருததை இந்த மன்றத்திற்கு உள்ளேயும் வெளியேயும் வைத்துக்கொண்டிருக்கிற நாங்கள் ஆட்சி பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிற அமைச்சர்களை தனித்தனியாக அவர்களுடைய ஆற்றலைப் பற்றி எடுத்து பேசுகிறோம் என்றால், அதுமாதிரி காலையிலே பேசப்படுவது ஜனநாயக பண்பாடு, அது மாலை நேரத்திலே மேடையில் பயன்படுத்தப்படமாட்டாது என்ற எண்ணத்திலே பேசுகிறோம். ஏனென்றால், காலைநேரப் பேச்சுகளில் "எங்கள் அமைச்சர்களை போற்றிச் சொல்லுகிறார்கள்" என்று அரசியலை ஓரளவுக்கு அறிந்திராதவர்கள் சிலபேர்கள் பேசுகிறார்கள்; அங்கத்தினர்கள் அல்ல, பொதுவாக கட்சியில் உள்ளவர்கள். ஆகையினால்தான், அமைச்சர்களிடத்தில் உள்ள ஆற்றலை எடுத்துச் சொல்வதற்கும், அமைச்சர்கள் வைத்திருக்கும் கொள்கைகளைச் சொல்வதற்கும் அடியோடு மாறுபாடு இருக்கிறது. இந்த அமைச்சர் அவையில் இருக்கும் அமைச்சர்களை எல்லோரையும் எடுத்துக் கொண்டாலும், தனித்தனியாக எடுத்துக் கொண்டாலும், எல்லோரும் ஆற்றல் மிக்கவர்கள். நான் இந்த மன்றத்திலே கவனித்துப் பார்த்தவர்கள் அத்தனை பேரும் அதை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அந்த விதத்தில், இன்றையதினம் என்னுடைய கழகத்தைச் சேர்ந்த உறுப்பினர் திரு. கோவிந்தசாமி, நம் நிதி அமைச்சராகவும், காங்கிரஸ் கட்சி முக்கியஸ்தராகவும், இன்றையதினம் சட்ட சபையின் நடவடிக்கைகளை நடத்திச் செல்லும் தலைவராகவும் அமர்ந்து நல்ல பணி ஆற்றிக்கொண்டு வருகிற கனம் சுப்ரமணியம் அவர்களை ஏசுநாதருக்கு ஒப்பிட்டுச் சொன்னார்கள், நல்ல உபதேசங்களை செய்து கொண்டு இருக்கிறார்கள் என்பதை மனதில் வைத்துக் கொண்டு. ஏசுநாதருக்கு ஒப்பிட்டுச் சொன்னதைக் கேட்டு ஒரு கணம் சந்தோஷம் அடைந்தேன். ஐந்து வருடம் அவர்களோடு பழகிய நட்புரிமையோடு, கனம் சுப்ரமணியம் அவர்களோடு, ஏசுநாதரோடு, நாமும் கூடிப் பழகியிருக்கிறோம் என்று பெருமைப்பட்டுக் கொள்ளலாம் என்று மகிழ்ந்தேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: சிலுவையில் அறையாமல் இருக்கவேண்டும்! (சிரிப்பு.)

[15th December 1961

SRI C. N. ANNADURAI : மறுகணம், மருட்சி அடைந்தேன். ஏனென்றால், ஏசுநாதரின் சீடர்களில் ஒருவர் அவரைக் காட்டிக் கொடுத்தது போல், இந்த ஏசுநாதருக்கு ஆபத்து வராமல் இருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டேன். நம்முடைய நிதி அமைச்சர் பத்து ஆண்டுகளாக இந்த மன்றத்திலே நல்ல அனுபவத்தைப் பெற்றது மட்டுமல்லாமல், மற்றவர்களுக்கும் நல்ல அனுபவத்தைப் பெற வழிகாட்டியாக இருந்து வந்தார்கள் என்பதை எனக்கு முன்னால் இங்கே இடம் பெற்று இருக்கும் அங்கத்தினர்களும் எடுத்துச் சொன்னார்கள். அவர்களுக்கு இந்த மன்றத்திலே, 10 ஆண்டுகளாக, 15 ஆண்டுகளாக இடம் பெற்ற உறுப்பினர்கள் ஆக இருக்கிறவர்கள், புதியதாக வந்தவர்கள் உறுப்பினர்களாக இருக்கிறவர்கள், அனைவரையும் எண்ணிப் பார்க்கும் நேரத்தில் மன்ற நடவடிக்கைகளில் நல்ல அக்கறை காட்டித்தான் அத்தனை அங்கத்தினர்களும் நடந்து கொண்டிருக்கிறார்கள். அமைச்சர் அவையில் உள்ள எல்லா அமைச்சர்களும், அவரவர்கள் துறைகளில், தங்கள் தங்களுடைய வேலையை நல்ல திறமையைக் காட்டி, அக்கரையோடு பாடுபட்டிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுப்பதற்கு இல்லை என்பதை சொல்வதனால், அந்த அளவுக்கு வேறு யாரும் இல்லை என்றே யாரும் கருத வேண்டாம் என்று அரசியல் காரணத்திற்காக இணைத்துக்கொள்ள விரும்புகிறேன். ஆற்றலோடு பணியாற்றியிருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல, அவர்களுக்குப் போதுமான வாய்ப்புக்கள் அளிக்கப் படுமேயானால், அதைவிட ஆற்றலோடு அவர்கள் திறன் நாட்டுக்குப் பயன்பட்டிருக்கும் என்பதை நான் எடுத்துக் காட்டத் தவறக்கூடாது. அதை எடுத்துச் சொல்லும் நேரத்தில், ஒரு கட்சியில் இருக்கும் தலைவர்களின், ஒரு நாட்டை ஆளும் அமைச்சரின் உண்மையான ஆற்றலை எப்பொழுது மதிப்பிட வேண்டும் என்று யாராவது என்னைக் கேட்டால், ஆளும் கட்சி 150 உறுப்பினர்களாகவும், எதிர்த் தரப்பில் 50 உறுப்பினர்களாகவும் இருக்கும் இந்தக் காலத்தில் அல்ல. இருக்கின்ற எதிர்த் தரப்பில் 50 பேர்கள் என்பது மட்டுமல்ல, கனம் சின்னதுரை சொன்னபடி பஞ்ச பாண்டவர்கள், ஐந்து பேர்கள் என்று சொல்லி, அந்த ஐந்து பேர்களில் யார் தருமன், யார் வீமன் என்ற சந்தேகம் இருக்கிறது என்றும் திரு. சின்னதுரை சொன்னார்கள். ஆனால் எங்களுக்குள்ளே அந்த சந்தேகம் இருந்தாலும், பஞ்ச பாண்டவர்கள் எதிர்த்தரப்பினர் என்று குறிப்பிட்டுவிட்டு, திரௌபதி நாட்டின் நலன் என்று சொன்னார்கள். யார் தருமன், யார் வீமன் என்ற சந்தேகம் வந்தாலும், யார் திரௌபதி என்ற சந்தேகம் இல்லாவிட்டால் நல்லதாக இருக்கும். அந்த வகையில், இளைத்திருக்கும் எதிர்த்தரப்பினரை வைத்துக் கொண்டு, 150 எண்ணிக்கையை வைத்திருக்கும் நேரத்தில் உள்ளபடியே சொல்கிறேன், இருக்கின்ற ஆற்றல் அத்தனையும் வெளிப்படக் கூட தேவை கிடையாது. ஆற்றலைக் காண்பிப்பதற்குப் போதுமான வாய்ப்பு எழாது. ஆகையினால், அடுத்து அமைகின்ற அவையிலே எதிர்த்தரப்பினரும், ஆளும் தரப்பினரும் ஏறக்குறைய

15th December 1961] [Sri C. N. Annadurai]

எண்ணிக்கை பலத்தில் ஒன்றுக்கொன்று எட்டிப் பிடிக்கும் வகையில் இருந்தால் தான், ஆளும் கட்சி அடக்க உணர்ச்சியோடும், எதிர்க்கட்சி பொறுப்புணர்ச்சியோடும் நடந்து கொள்ள இடம் ஏற்பட்டு, ஜனநாயகத்தில் சம நிலை ஏற்படும். அப்படி செயல்படுகின்றவர்களின் ஆற்றல் என்ன என்று கண்டு பிடிக்கலாம். இப்பொழுது ஆற்றல் இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் ஆற்றலை மதிப்பிடும் நேரம் இது அல்ல. பணக்கார வீட்டுப் பிள்ளையாக இருந்து பலருடைய பாராட்டுதலைப் பெற வாய்ப்பு அளிப்பதுபோல, ஆளும் கட்சிக்கு எண்ணிக்கை பலம் அதிகமாக இருப்பதால், அதிகாரத்தை பயன்படுத்தப் பயன்படுகிறதே தவிர, அந்தப் பணக்கார வீட்டுப் பிள்ளை பணம் இருந்தாலும், பண்பு கெடாமல் இருப்பது போல, எண்ணிக்கை பலம் அதிகமாக இருந்தாலும், அதை மட்டும் அமைச்சர் நம்பிக்கொண்டு இராமல், எங்கள் கருத்துக்களையும் மிக்கப் பொறுமையோடு கேட்டுக்கொண்டு இருந்த அவர்களுடைய தன்மை ஜனநாயகப் பண்பிற்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது. ஜனநாயகப் பண்பை நிறைவேற்றிக் கொடுப்பதில், நம் நிதி அமைச்சர் இந்த சபையின் நடவடிக்கைத் தலைவர் என்ற முறையிலே ஈடுபட்ட நேரத்திலே, சற்று காரசாரமாக பேசுவார், முன் கோபமாகப் பேசுவார் என்று என்னுடைய தரப்பில் உள்ளவர்கள் கூறினார்கள். நான் இன்றையத் தினம் வெளிப்படையாக சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நான் எந்த அளவுக்கு அவரிடத்தில் எரிச்சலோடு வாதங்கள் இருக்கும் என்று எதிர்பார்த்து அவைக்குள்ளே நுழைந்தேனோ, அதற்குக் குறைவாகத்தான் அவர்கள் வாதங்கள் இருந்தன; அவர்கள் எந்த அளவுக்கு எரிச்சல் ஊட்டுவதைத் தாங்கிக் கொள்வார்கள் என்று நினைத்தேனோ அதற்குக் குறைவாகத்தான் அவர்களால் தாங்கிக் கொள்ள முடிந்தது, அந்த அளவில்தான் வாதங்கள் இருந்தன, அந்த அளவில்தான் நடக்கிறது என்பது மன்றத்தின் நடவடிக்கைகள் நமக்கு மிக நன்றாகக் காட்டுகிறது. அடுத்து வரும் அவையிலே இந்தப் பண்பு மேலும் வளரும் என்று உறுதியாக நம்புகிறேன். ஆகையினால், இந்த ஐந்து ஆண்டுகளில், சமநிலை இல்லாத அரசியல் அமைப்பின் கீழ் பணியாற்றும் இந்த மன்றத்திலே இடும் இறுதியான மதிப்பீடு, உண்மையான மதிப்பீடு, போதுமான மதிப்பீடு என்று அதைக் கொள்ள முடியாது என்பதைக் கவனப்படுத்த விரும்புகிறேன்.

இதற்கு இடையில், பார்க்கும் நேரத்தில் நம் அமைச்சர் அவையில் இருக்கும் எட்டு அமைச்சர்களும் நல்ல விதத்தில்நான் பணியாற்றுகிறார்கள் என்பதை எந்த அரசியல் கட்சியில உள்ளவர்களும் மனமார ஏற்றுக்கொள்வார்கள். குறிப்பாகவும், சிறப்பாகவும் நிதி அமைச்சராக இருப்பவரே, கல்வித்துறைப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு இந்த நாட்டின் கல்வி அதிகமான அளவில் பரவவேண்டும் என்றும், அதன் தரமும் பயனும் உயர வேண்டும் என்றும் மிகுந்த அக்கரை காட்டுகிறார்கள். தொழில்

அமைச்சர், தொழில் வாய்ப்புகள் அதிகப்பட வேண்டும் என்கிற அளவுக்கு தனிக்கவனம் செலுத்தி வந்திருக்கிறார்கள். போலீஸ் துறை அமைச்சர் கூடுமான வரையில் எந்த அளவுக்கு போலீஸ் உபயோகிக்கப்படவேண்டும் என்பதிலே கண்ணும் கருத்துமாக இருந்து வந்திருக்கிறார். மாராமத்துத்துறை அமைச்சர், மாராமத்துத் துறையில் மட்டுமல்லாமல், நாங்களெல்லாம் பார்த்து மகிழ்கிற வகையில், பழங்குடி மக்களுக்காக அக்கறைகாட்டி, பழங்குடி மக்களுடைய அன்பினைப் பெற்றும், அவர்கள் அனைவருடைய நல்ல பாராட்டுதலையும் பெற்றிருக்கிறார். அமைச்சர்களைத் தனித் தனியாக குறிப்பிடவில்லை என்பதனால், அவர்கள் என் நெஞ்சத்தில் இல்லை என்று எந்த அமைச்சரும் கருத வேண்டாம்; உதாரணத்திற்காக குறிப்பாக ஒன்று இரண்டு பேரைக் கோடிட்டுக் காட்டினேன். அவ்வளவு நல்ல முறையிலே திறமையாகப் பணி யாற்றி நம் பாராட்டுதலை பெறும் அளவுக்கு பணியாற்றி இருக்கிற அமைச்சர்கள், தாங்கள் விடு திரும்பும் நேரத்தில், "இந்த ஐந்து ஆண்டுகளில் மற்ற ராஜ்யங் களெல்லாம் சாதிக்காத என்ன காரியத்தை நாம் சாதித்து இருக்கிறோம், மற்ற ராஜ்யங்கள் நம்மை வழிகாட்டியாக எடுத்துக் கொள்கிற அளவுக்கு எந்தத் திட்டங்களை நிறை வேற்றியிருக்கிறோம், மற்ற ராஜ்யங்கள் பார்த்து பின் பற்றுகிற அளவு என்ன புதுமைகளைப் புகுத்தி இருக்கிறோம்" என்று எண்ணிப் பார்த்து தங்களுக்குத்தாங்களே மதிப்பிடுகளைப் போட்டுக்கொள்ள வேண்டுமே தவிர, நிர்வாகத்தை ஒழுங்காக நடத்திக்கொண்டு போவது மட்டும் அமைச்சர் அவை பாராட்டு தலைப் பெற உரியது ஆகாது. ஏனென்றால், ஒரு அமைச்சர் அவை, நிர்வாகத்தை ஒழுங்காக நடத்தாவிட்டால், மக்கள் குற்றவாளிக் கூண்டிற்கு இழுத்துச் செல்வார்கள், பரவாயில்லை என்று யாரும் பொருத்துக்கொள்ள மாட்டார்கள். ஆகையினால், இந்த அமைச்சர் அவை இந்த ஐந்தாண்டுக் காலத்தில் சொந்தப் பெருமை, புகழ் அடையத் தக்க திட்டங்களை இந்த ராஜ்யத்திலே என்ன நிறைவேற்றி இருக்கிறார்கள் என்பதைத்தான் அருள்கூர்ந்து அவர்கள் அரசியல் கட்சி அருவருப்பு, எதிர்ப்பு உணர்ச்சி இல்லாமல், எண்ணிப்பார்க்க வேண்டும்.

12-30 p.m. இதை எண்ணிப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள் வதற்குக் காரணம் அதற்கேற்ற திறமை அவர்களிடம் நிச்சயமாக இருக்கிறது, நல்ல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு ஏற்ற திறமை இருக்கிறது என்றாலும், அதிகாரங்கள் கட்டுப்படுத்தப் பட்டு இருந்தாலும், நிர்வாக இயந்திரத்தை செம்மையாக ஓட்டிச் செல்லுகின்ற அந்த ஒரு காரியத்தில் அவர்களுடைய முழு ஆற்றலையும் பயன்படுத்திக் கொள்ள முடிந்தது. நம்முடைய நிதி அமைச்சரவர்கள் இங்கே இருக்கப்போவதில்லை, டெல்லிக்குப் போகிறார் என்று வெளியில் பரவலாக பேசிக் கொள்ளப்படுகிறது. அங்கு அமைச்சரவையில் இடம் பெறுவார்களென்றும் அரசியலிலே இருப்பவர்கள் ஆருடம் கணிக்கிறார்கள். அவர்கள்

இங்கே இருக்கும் நாட்களில் நம் ராஜ்யத்தின் நலனைப் பாதுகாப்பேன என்று பேசிக் கொண்டிருந்ததை காது குளிரக் கேட்டுக் கொண்டிருந்தோம். இனி மத்திய சர்க்காருக்குப் போய், பாரத தேசத்தின் ஒற்றுமைக்காக என்று சொல்லும் நேரத்தில், நம்முடைய ராஜ்யத்திற்கென்று பேசிக் கொண்டிருந்த ஒரு நல்ல உரிமைக் குரலைக்கூட நாம் இழந்து விடுவோமோ என்று நாட்டு மக்கள் கவலைப்படுகிறார்கள். அதோடுமல்லாமல் அவருடைய அறிவாற்றல் ஒரு பரந்த நாட்டுக்கு கிடைக்கிறது, ஒரு பரந்த தேசத்திற்கு கிடைக்கிறது என்று பொதுவாக உபசாரத்திற்காக பேசிக்கொண்டாலும்கூட, தொழில் துறையில் பிற்பட்ட நிலையில் இருக்கிற இந்த ராஜ்யத்துக்கு அவருடைய தொண்டு இன்னும் தொடர்ந்து கிடைக்கவேண்டுமென்று நாட்டு மக்கள் எதிர் பார்க்கிறார்கள். ஆனால் அவர்கள் வேறு இடத்திற்கு போவதாக முடிவு செய்து விட்டதாக பத்திரிகைகளிலே பார்த்தேன். அவர்களுக்கு நான் என்னுடைய நல்லெண்ணத்தையும், எனக்கும் அவருக்கும் வயதிலே ஏற்றத்தாழ்வு இருக்குமோ தெரியாது, இருந்தாலும் என் நல்வாழ்த்துக்களையும் அளித்து அவர்கள் அந்த இடத்திற்கு போவதற்கு பொதுமக்களுடைய அனுமதி கிடைக்கிற நேரத்திலே, அந்த இடத்திற்கு சென்று, இங்கு பத்து ஆண்டுகளிலே அவர்கள் பெற்றிருக்கிற நல்ல திறமையும், நல்ல பயிற்சியையும், பயன்படுத்துகிற நேரத்திலே, அங்கிருந்து பெரிய அலுவலிலிருந்து விலகிய கனம் டி. டி. கிருஷ்ணமாசாரி சொன்ன ஒரு ஆங்கில வாசகத்தை அவர் கவனத்திலே வைத்துக் கொண்டு பணியாற்றுவார்களென்று நான் கருதுகிறேன். "The maneater is at large" என்று கனம் டி.டி.கே. அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். மனிதனுடைய ரத்தத்தை உறிஞ்சுகிற, குடிக்கிற காட்டுப்புலி அங்கே உலாவுகிறது என்று டி.டி.கே. அவர்கள் டெல்லி பேரரசைப்பற்றியும், பேரரசின் சூழ்நிலையைப் பற்றியும் சொல்லிவிட்டு வந்தார்கள். அந்தப் புலி உலவுகிற காட்டிற்குத்தான் நமது கோவை செல்வத்தை அனுப்பிக் கொடுக்கிறோம் என்று நாட்டு மக்கள் அவருடைய பாதுகாப்புக்காக மெத்தவும் இன்றைய தினம் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். கோவை ஏற்கெனவே இந்தியப் பேரரசுக்கு ஒரு நல்ல நிதி அமைச்சரை அனுப்பிக் கொடுத்திருக்கிறது. இன்றைய தினமும் ஒரு நிதி அமைச்சரை கோவை மாவட்டம் அளிக்கும் என்று வெளியே பேசிக்கொள்கிறார்கள். அப்படிப்பட்ட ஒரு இடம் கிடைக்கவேண்டுமே தவிர, பத்தோடு பதினொன்றாக அங்கே உட்கார்ந்திருப்பதைவிட இந்த ராஜ்யத்தை நடத்திச் செல்வதுதான் நல்லது என்று உறுதியாக நான் நம்புகிறேன். அவருடைய நண்பர் என்ற முறையில் இந்த யோசனையை தெரிவித்துக்கொள்ள எனக்கு உரிமை இருக்கிறது என்று நான் கருதுகிறேன். ஆகவே அவர்களுடைய நிர்வாகத் திறமை வெறும் பாராளுமன்ற விவாதத்திலே மட்டும் அடுத்த ஐந்தாண்டுகளிலே கழிக்கப்படுகின்ற ஒரு சூழ்நிலை ஏற்படுமேயானல் அது நாட்டிற்கு நஷ்டம் என்று நான் கருதுகிறேன்.

இங்கு அவருடைய அதிகாரங்கள் கட்டுப்படுத்தப்பட்டு இருப்பதைப்பற்றி நான் குறிப்பிடுகின்ற நேரத்திலேதான், நாம் ஒதுக்கிப்போக முடியாத அரசியல் மாறுபாடுகளை நாம் இன்றைய தினம் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆகவே காங்கிரஸ் கட்சியின் கொள்கையின்படி இந்திய அரசுக்கு உட்பட்ட ஒரு சிற்றரசாக இது நடத்திச் செல்லப்படுவது சீரான நிர்வாகத்தை நடத்துவதாகும் என்று எப்படி அவர்கள் திருப்திப்படுகிறார்களோ அவர்கள் திருப்திப்படுவதற்கு காரணம் இருக்கிறது என்பதை எப்படி நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோமோ, அதைப்போலவே இந்திய அரசுக்கு உட்பட்ட ஒரு சிற்றரசு என்ற நிலைமையில்லாமல், ஒரு தனி அரசு என்ற உயர் நிலை இருக்குமேயானால், அவர்களுக்கு இருக்கும் இந்த ஆற்றல் பன்மடங்கு அதிகமாக நாட்டுக்குப் பயன்படும் என்று நான் குறிப்பிட்டுக் கொள்ளாமல் ஒருவரை ஒருவர் பாராட்டிக் கொள்வது கொள்கையை மறந்துவிட்ட குற்றத்திற்கு ஆளாவதற்கு இடமளிக்கும். ஆகவே அந்த வேலிக்கு இடையிலே செய்ய வேண்டிய காரியங்களை திறமையாக செய்து, மக்களுடைய நன் மதிப்பை அவர் பெற்றிருக்கிறார். ஆனால் நான் சொன்ன மாதிரி வீட்டுக்கு சென்ற பிறகு, என்னென்ன சாதித்தோம், மற்ற ராஜ்யங்களில் சாதிக்காததை என்ன சாதித்திருக்கிறோம் என்று அமைச்சரவர்கள் எண்ணிப் பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அப்படிப் பார்க்கின்ற நேரத்தில், இந்த ஐந்து ஆண்டுகளிலே புரட்சிகரமான எந்த புதிய திட்டத்தையும் நாம் நிறைவேற்றவில்லை என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். புரட்சிகரமான திட்டம் எதுவும் இல்லையா, உச்ச வரம்பு சட்டம் இல்லையா என்ற எண்ணம் தோன்றும். உச்ச வரம்பு சட்டம் அகில இந்தியாவுக்கும், ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் சார்ந்தது. நமக்கு மட்டுமல்ல. நாம் தனித்தன்மையோடு சென்னை ராஜ்யத்தின் சார்பில் நிறைவேற்றியிருக்கிற ஒரு புரட்சிகரமான திட்டம் தீவிரமான திட்டம் என்று சொல்லத்தக்க எந்தக் காரியத்திலும் நாம் ஈடுபடவில்லை. ஒரு குடும்பத் தலைவன் பொறுப்போடு ஒரு குடும்பத்தின் வரவைப் பெற்று, அதைச் சீராக செலவழித்து குடும்பத்தை கடனில்லாமல் வைத்துக் கொண்டிருந்தபோதிலும், அல்லது கடன் பட்டாலும் திருப்பித் தரக்கூடிய வருவாயைத் தேடிக்கொண்டு குடும்பத்தை நடத்துவதுபோல, ராஜ்ய சர்க்கார் என்ற குடும்பத்தை நடத்திக் கொண்டு வந்திருக்கிறார்களே தவிர, இந்த நாட்டினுடைய தேவைகளைக் கவனித்து நாட்டின் வறுமையை நீக்குவதற்கு நாட்டு மக்களுக்கு ஒரு புதிய நம்பிக்கையை ஏற்படுத்துவதற்கேற்ற திட்டங்களைப் போடுவதற்கு நம்முடைய அமைச்சர்களுக்கு போதுமான அவகாசமும், போதுமான அதிகாரமும் அளிக்கப்படவில்லை. ஆகவே அந்த ஆற்றல் நெய்வேலி நிலக்கரியைப்போல் சுரங்கத்தை வெட்டி எடுக்கப்படுகிற நிலையிலும், சேலத்தின் இரும்பைப்போல் பல ரசாயன சாலைகளில் ஆராய்ச்சி செய்வதைப்போலவும் இருக்கிறதே தவிர, போதுமான அளவுக்கு அந்த ஆற்றல் நாட்டுக்கு பயன்படுத்தப்

15th December 1961] [Sri C. N. Annadurai]

படவில்லை என்பது எனக்குள்ள குறையாகும். இதைப்போலவே இங்கே நடத்தப்பட்ட விவாதங்களில் ஒவ்வொரு அங்கத்தினரும் காட்டியிருக்கிற திறமை எந்த அளவுக்கு இருந்தது என்பதைவிட எந்த அளவுக்கு இருக்கவேண்டும் என்பதை ஜனநாயகத்தில் கட்சி அரசியல் நடத்துகிற மற்ற நாடுகளில் முறைகளோடு நாம் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். ஆளும் கட்சி என்ற ஒன்று அமர்ந்தவுடனேயே, ஆளும் கட்சியிலுள்ளவர்கள் ஒரு மந்திரி சபையை அமைக்கிறார்கள் என்றால் எதிர் கட்சியிலுள்ளவர்கள் ஒரு "ஷேடோ காபினட்" அமைத்து, இவர் அந்தத் துறையை கவனித்துக் கொள்ளுவார், அவர் இந்தத் துறையை கவனித்துக் கொள்ளுவார் என்ற முறை ஏற்படுகிறது. இன்றைய தினம் ஆளும் கட்சியினருக்கும் எதிர் கட்சியினருக்கும் அந்த வகையிலே இருக்கும் தொடர்பைப் பார்த்தால், அவர் இவருக்கு பதில் சொல்லுவார், இவர் அவருக்கு பதில் சொல்லுவார் என்ற அளவுக்குத்தான் நாம் வளர்ச்சி அடைந்திருக்கிறோம். அதற்குக் காரணம் ஆளும் கட்சியினுடைய எண்ணிக்கை அதிகமாகவும், எதிர் தரப்பின் எண்ணிக்கை குறைவாகவும் இருக்கிறது. நாங்கள் என்ன செய்யலாம் என்று ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் நிச்சயமாக கேட்க உரிமை படைத்தவர்கள். என்ன செய்யலாம் என்று என்னைக்கேட்டால், நாட்டு மக்களுடைய மனோ நிலையை கணக்கெடுக்கிற நேரத்திலே, இந்த நாட்டு மக்களுடைய அரசியல் கருத்துக்களை, பல்வேறு வகையான மாறுபட்ட கருத்துக்களை, அவரவர்கள் ஆழ்ந்த நம்பிக்கையோடு வைத்துக்கொண்டிருக் கிறார்கள் என்ற அடிப்படையிலே ஒரு உண்மையான ஜனநாய கத்தை சட்ட மன்றத்திலே வளப்படுத்த வேண்டுமானால், விகிதா சார உறுப்பினர் முறை "ப்ரபோர்ஷனல் ரெபரசன்டேஷன்" என்ற முறை ஏற்பட்டாலொழிய நாட்டினுடைய கருத்துக்கள் அத்தனையும் சட்ட மன்றத்தில் பிரதிபலிக்கும் காலத்தை நாம் எதிர்பார்க்க முடியாது. நமது நிதி அமைச்சர் அவர்களை, பிரெஞ்சு நாட்டு அரசியல் பொருளாதார மேதை மொராபூ என்பவர் எடுத்துச் சொல்லியிருக்கிற கருத்துக்களை அவருடைய ஓய்வு நேரத்திலே பார்க்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சட்ட மன்றம் எப்படி இருக்கவேண்டுமென்றால், நாட்டை அப்படியே படம் பிடித்து காட்டவேண்டும். ஆனால் நாட்டு அளவுக்கு அந்தப் படம் இருக்காது, படம் சின்ன அளவுக்குத் தான் இருக்குமென்றால், நாட்டிலுள்ள அத்தனையும் அந்த படத்திலே தெரியும். இரண்டொரு தென்னை மரங்கள் இருந்தால், படத்திலே சின்னதாகத் தெரியும். பக்கத்திலே ஒரு கேணி இருக்கு மானால் அந்தக் கேணி படத்திலே ஒரு புள்ளி அளவுக்காவது தெரியும். அதைப்போலவே இந்த நாட்டிலே எழுதப்படுகிற எல்லாவகையான காரியங்களும் இடம் பெறத்தக்க வகையிலே பல் வேறு கட்சிகளும், அந்தந்த கட்சிகளுக்கு நாட்டிலே கிடைக்கிற வாக்காளர் எண்ணிக்கைக்குத் தக்கபடி இடம் கிடைத்திருக்கு மானால், 50 லட்சம் வாக்காளர்களால் ஆதரிக்கப்பட்ட காங்கிரஸ் கட்சிக்கு 150 இடங்களும், 17 லட்சம் வாக்காளர்களால் ஆதரிக்கப்

[Sri C. N. Annadurai] [15th December 1961

பட்ட திராவிட முன்னேற்றக் கட்சிக்கு 15 இடங்களும் கிடைக்கும் முறையில் இந்தத் தப்புக் கணக்கு ஏற்பட்டிருக்காது. அந்தத் தப்புக் கணக்கு ஏற்பட்டதினால் எங்களுக்கு அரசியலிலே இடம் ஏற்படாமல் நஷ்டம் வந்துவிட்டது என்பதற்காக இதைச் சொல்லவில்லை. ஆனால் அப்பொழுது சம நிலை ஏற்பட்டிருக்கும். ஆகவே நல்ல ஜனநாயக பண்பாடு வளரவேண்டும் என்ற அந்தக் கருத்துக்காகக்கூட இந்த நாட்டு மக்களுடைய மனோபாவத்தை கருத்திலே வைத்து அதற்குப் பாடுபடவேண்டியது முக்கியம் என்ற கருத்துக்கு நான் வந்திருக்கிறேன். என்னுடைய கழகத்தின் சார்பிலே வந்திருக்கிறேன் என்பது மட்டுமல்ல, கம்யூனிஸ்டு கட்சியும் அதே கண்ணோட்டத்துடன் சிந்தனை செலுத்தி வருகிறார்கள் என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். இதைப் போலவே எதிர் தரப்பிலுள்ள நாங்கள் 5 கட்சிகளாக இருக்கிறோம் என்ற காரணத்தால் ஆளும் கட்சியில் உள்ளவர்களின் பணி மிகவும் எளிதாக முடிகிறது. கனம் சின்னதுரை பேசியதற்கு ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒருவர் பதில் சொல்லி விட்டார். கனம் கலியாணசுந்தரம் பேசியதற்கு இன்னொருவர் பதில் சொல்லி விட்டார் என்ற அடிப்படையில் இப்பொழுது ஆளும் கட்சி இயங்கி வருகிறது. இப்படி ஒருவருக்கு ஒருவர் பதில் சொல்லக்கூடிய அளவில் ஐந்து வருஷங்களாக இங்கு ஆளும் கட்சியிலுள்ளவர்கள் பணியாற்றி வருகிறார்கள். ஆனால் எதிர்க் கட்சியிலுள்ள எல்லா கட்சிகளும் ஒன்று சேர்ந்து ஒரு பெரிய எதிர்க்கட்சியாக இருந்தால் இப்படி பதில்சொல்வது என்பது எளியதாக முடியாது என்பது என் கருத்து. ஆகையால் தான் ஒவ்வொரு கட்சியினுடைய கருத்தும் இந்த சட்டமன்றத்தில் பிரதிபலிக்கிறது. அந்த முறையில் ஜனநாயக முறையில் சில ஈடுபாடு ஏற்பட வேண்டும் என்று நான் கருதுகிறேன். அப்பொழுது தான் எதிர் கட்சியின் முழு பண்பு உண்மையிலேயே நாட்டிற்குக் கிடைக்கும். அந்த முறையில் சொல்லும்போது நம்முடைய அமைச்சர்கள் திறமையாக பணியாற்றி வருகிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அதைப் போலவே நம்முடைய சட்டசபை உறுப்பினர்களும் கட்டுப்பாட்டுடன் இங்கு நடந்து கொண்டிருக்கிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். அந்த அளவில் என்னுடைய நன்றி. எல்லா அங்கத்தினர்களுக்கும் உறித்தானது. எல்லாக் கட்சி அங்கத்தினர்களும் நல்ல முறையில் நடந்துகொண்டிருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களும் அதில் பெரும் பங்கு ஏற்றுக்கொள்ள வேண்டும். அப்படிப் பட்ட திறமையில் அவர்களுக்கும் ஒரு பங்கு உண்டு. அவர்களும் விவாதத்தில் எவ்வளவோ நல்ல முறையில் கலந்து கொண்டிருக்கிறார்கள். எவ்வளவோ ஜனநாயக பண்பாடுடன் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். வெளியிலும் சரி இங்கும் சரி நேர்மையாக பொறுப்புள்ள முறையில் தான் நடந்துகொண்டிருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். நல்ல பொறுப்புள்ள அரசியல் கட்சியாக பணியாற்றி

15th December 1961] [Sri C. N. Annadurai]

வருகிறார்கள் என்பதை இந்த சட்ட மன்றத்தில் சொல்லிக் கொள்ளுகிறேன். இந்த சட்ட மன்றத்தில் எவ்வளவு வெளி நடப்புகள் நடந்தன. வெளி சட்ட மன்றங்களில் எவ்வளவோ அங்கத்தினர்கள் வெளியேற்றப் பட்டிருக்கிறார்கள். எவ்வளவோ வெளி நடப்புகள் ஏற்பட்டிருக்கின்றன. எவ்வளவோ வெளி யேற்றங்களும் நடந்திருக்கின்றன. எவ்வளவோ சட்டசபை அங்கத்தினர்கள் வெளியிடங்களில் வெளியேற்றப் பட்டிருக் கிறார்கள். அந்தப் புள்ளி விவரங்களையும் இங்கு வெளியேற்றம், வெளி நடப்பு கணக்குகளையும் எடுத்துப் பார்த்தால் இந்த சட்ட மன்றம் எவ்வளவோ அமைதியான முறையில் நடைபெற்றதாகத் தெரிய வரும். எதிர் கட்சிகள் எவ்வளவு கண்டனக் குரல்களை எழுப்பினாலும் சபை எவ்வளவோ நல்ல முறையில் நடந்திருக் கிறது. மிக முக்கியமான காரியங்களில் எதிர் கட்சிகள் தங்க ளுடைய கருத்துக்களை தெரிவிக்கும்போது எவ்வளவோ கூச்சல் கள் கிளம்பும். எதிர் கட்சிகள் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்வதற்கு எவ்வளவோ காரியங்களைச் செய்வார்கள். அவைகள் எல்லாம் இங்கு நடைபெறவில்லை. அவரவர்களுடைய கட்சிக்கு பலத்தையும் செல்வாக்கையும் தேடிக் கொள்வதற்காக எவ்வளவோ காரியங்களை கடைப்பிடிப்பார்கள். அவைகள் எல்லாம் இங்கு கிடையாது. அவரவர்களுடைய பொறுப்புகளை எவ்வவளவோ நன்றாக தெரிந்து கொண்டு அதன்படி நடந்து கொண்டிருக்கிறார்கள். கனம் சின்னதுரை கட்சியாகிய ப்ரஜா சோஷலிஸ்ட் கட்சியைப் போன்றும், கம்யூனிஸ்ட் கட்சியைப் போன்றும் சிறு கட்சியாக இருந்தாலும் கூட திராவிட முன்னேற்றக் கழகமாக இருந்தாலும், ஜனநாயக காங்கிரஸ் கட்சி யாக இருந்தாலும் அவர்கள் எல்லோரும் மிகுந்த பொறுப்புணர்ச் சியுடன் தான் நடந்து கொண்டிருக்கிறார்கள். அதிலும் குறிப் பாக திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களைப்பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அவர்கள் இந்தச் சட்டசபைக்கு வருவதற்கு முன்னாலேயே சட்டத்திலும் அமைதி யிலும் ஒழுக்கத்திலும் சட்ட மன்ற ஒழுக்கத்தின்படி நடப்பதிலும் மிகுந்த அக்கரை கொண்டவர்களாக இருந்தார்கள். அதற்கு முக்கிய காரணம் காட்ட வேண்டுமானால் கனம் நிதி அமைச்சரும் சரி மற்ற அங்கத்தினர்களும் சரி சட்டசபையில் விவாதம் நடக்கும் போதும் சரி கேள்விகள் கேட்கும்போதும் சரி, கார சாரமாக கேட்டாலும் பேசினாலும் அவர்கள் வெகு அமைதி யாகவும் பணிவுடனும் இருந்திருக்கிறார்கள். அப்படி இல்லாம லிருந்திருந்தால் இந்த ஐந்து ஆண்டும் இவ்வளவு வேகமாக ஓடி இருக்காது. சட்டசபையில் ஏற வேண்டியதுதான். அந்தச் சூட்டுடன் சாப்பிடவும் வேண்டியதுதான். அதை வாங்கிக் குடிக்கும்போதும் சூடா இருக்க வேண்டியது தான். எப்படிப் பட்ட நிலைமை ஏற்பட்டாலும் அவர்கள் அமைதியை இழக்காமல் தான் இருந்திருக்கிறார்கள். சண்டை போட்டுக்கொண்டிருக்க வேண்டும் என்ற எண்ணம் கிடையாது. அதைப்போலவே இன்றையதினம் நமது அமைச்சர் அவையும் நல்ல முறையில் தான்

பணியாற்றி வந்திருக்கிறது. எல்லா விவாதத்தையும் பொறுப்பான முறையில் தான் நடத்தி வந்திருக்கிறார்கள். ஆனால் ஒன்றை மட்டும் வெகு உணர்ச்சியுடன் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. ஒரு அரசியல் கட்சி இன்னொரு அரசியல் கட்சியை எதிர்த்து பேச வேண்டியதுதான். நாங்கள் திராவிட நாட்டை கேட்பதை வைத்துக்கொண்டு நமது நிதி அமைச்சர் அவர்கள் மோகன ராகத்தில் ஆரம்பித்து என்ன செய்து விட போகிறீர்கள் என்று அடாணு ராகத்தில் முடித்திருக்கிறார். இன்னும் கல்யாணி ராகத்திற்கு போய் சேருவதாகவும் இருக்கிறது. சில சமயங்களில் எங்களுடைய விவாதங்களை மதிக்காமல் இருக்கிறார்கள், சில உறுப்பினர்கள். அப்படி மதிக்காமல் இருந்தாலும் பாதகம் இல்லை. அந்த உரிமை அவர்களுக்கு இருக்கிறது. அந்த நிலை எங்களுக்கு இருக்கிறது. ஆனால் எங்களுடைய திட்டத்தில் நம்பிக்கையைக் கண்டு குறைகூறாதீர்கள். எங்களுடைய நம்பிக்கைக்கு மதிப்புக் கொடுங்கள். எங்களுடைய நம்பிக்கையான திட்டத்தில் சந்தேகப்படவேண்டாம் என்றுதான் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தங்களுக்கு பிடிக்காத கருத்துக்களை எடுத்துச் சொல்லுகிறோம் என்று வேண்டுமானால் சொல்லுங்கள். ஆனால் எங்களுடைய நம்பிக்கையில் சந்தேகப்பட வேண்டாம். எங்களுடைய கருத்துக்களில் சந்தேகப்பட வேண்டாம். தவிர ஆளும் கட்சியிலுள்ளவர்களிடம் எங்களுக்கு தனிப்பட்ட முறையில் நல்ல மதிப்பு உண்டு. கட்சிக் கொள்கை அடிப்படையில் ஒருவருக்கு ஒருவர் கருத்து மாறுபாடுகள் இருக்கலாம். அதெல்லாம் கட்சியின் அடிப்படையில் ஏற்பட்டது. அதன் அடிப்படையில் பேசும்போது ஆத்திரமாகப் பேசலாம். ஒன்றுக்கு ஒன்று விட்டுக் கொடுக்கக் கூடாது என்ற முறையில் பேசலாம். இருந்த போதிலும் எங்களுக்கு ஒவ்வொருவரிடத்திலும் தனிப்பட்ட முறையில் நல்ல மதிப்பு உண்டு. இந்த மன்றத்தில் தங்களுடைய கடமை உணர்ச்சியுடன் நல்ல முறையில்தான் பணியாற்றி வருகிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அதைப்பற்றி கனம் கலியாணசுந்தரம் அவர்கள் நன்றாக எடுத்துச் சொல்லி விட்டார். இப்பொழுது ஐந்து வருஷங்கள் கழிந்து நாம் போகிறோம். இந்த மன்றத்தைவிட்டு வீட்டுக்குப் போகும்போது வழியில் என்ன எண்ணம் வரும் என்பதைப் பற்றி யோசிக்க வேண்டும். இந்த ஐந்து ஆண்டு காலத்தில் விலைவாசிகளை குறைத்தோமா, விலைவாசிகள் குறையவில்லையே. அதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டோம், எந்தெந்த வரிகளைப் போட்டோம், இந்த ஐந்தாண்டுகள் இங்கு இருந்தோமே அதற்குள் கடன் அதிகமாக ஆகி விட்டதே அதைத் திருப்பித்தர என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறோம், பல திட்டங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றினோமே அந்த திட்டங்கள் மூலம் என்னென்ன முன்னேற்றத்தைக் கண்டோம் இந்த ஐந்தாண்டுகள் மன்றத்தில் இருந்தோமே வேலை இல்லா திண்டாட்டத்தைப் போக்கினோமா அதைக் குறைக்க முடியவில்லையே ஐந்தாண்டு இங்கு அமர்ந்திருந்தோமே என்ன செய்து

15th December 1961] [Sri C. N. Annadurai]

விட்டோம் என்றெல்லாம் யோசிக்கக்கூடிய நிலைமை ஏற்படும். ஆகவே மறுபடியும் ஆளும் கட்சியிலுள்ளவர்களே மறுபடியும் வந்தாலும் சரி அல்லது வேறு எந்தக் கட்சி ஆளும் கட்சியாக வந்தாலும் சரி அவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் ஏராளமாக இருக்கின்றன. இந்த ஐந்தாண்டுகளில் செய்யப்படாத காரியங்களையெல்லாம் செய்ய வேண்டியதாக இருக்கிறதே இன்னும் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும், சேலம் இரும்பு இன்னும் தூங்கிக்கொண்டு தானே இருக்கிறது, நெய்வேலி நிலக்கரி இன்னும் பேச்சளவில் தானே இருக்கிறது, எப்பொழுது அதை எடுத்து பயன்படுத்திக்கொள்ளலாம், ஐந்தாண்டுகளாக காந்த மலையிலுள்ள இரும்பு தூங்கிக்கொண்டிருக்கிறது, ஐந்தாண்டுகளாக நெய்வேலி நிலக்கரி தன்னை வெட்டி எடுக்கவில்லையே என்று நிந்தித்துக் கொண்டிருக்கிறது, சேது சமுத்திரம், தூத்துக்குடி துறைமுகம் தங்களை இன்னும் ஆழப் படுத்தவில்லையே என்று இன்னும் சொல்லிக் கொண்டிருக்கிறது. இவைகளுக்கு எல்லாம் புதிய மந்திரி சபை பதில் சொல்ல வேண்டியதாக இருக்கும். தூத்துக்குடி பவளங்கள் இன்னும் நாங்கள் பாரையிலேயே இருக்கிறோமே எங்களை எப்பொழுது ஆழப்படுத்தி எடுக்கப்போகிறீர்கள் என்று கேட்கும். வரப் போகிற அமைச்சரவை தொண்டி துறைமுகத்திற்கும் கடலூர் துறைமுகத்திற்கும் பாதை வசதி இல்லாத கிராமங்களுக்கும், டாக்டர்கள் இல்லாத வைத்தியசாலைகளுக்கும் வேலை இல்லா மக்களுக்கும் பதில் சொல்ல வேண்டியதாக இருக்கும். மந்திரி சபை எவ்வளவோ திறமைசாலிகளாக இருந்தாலும் இந்த பரிதாபகரமான நிலையைக் கண்டு பரிதபிக்க வேண்டியதாகத் தான் இருக்கும். ஆகவே இவ்வளவு வேலைகளும் செய்ய வேண்டியதாக இருக்கிறது என்பதை அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வந்து இவைகளையெல்லாம் செய்ய வேண்டும் என்று எடுத்துச் சொல்லி இந்த வேலையைச் செய்வதற்கு நாளை வரப்போகிற கட்சி இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு சிறந்த ஜனநாயக பண்பை ஜனநாயக பரம்பரையை இந்நாட்டிற்கு விளக்கிக் காட்ட வேண்டும் என்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அந்த வகையிலே மறுபடியும் நான் குறிப்பிட்டு சொல்வேன். அந்த வேலிக்கு இடையில் அமைச்சர்கள் தங்கள் திறமையை காட்டி நல்லபடி பணியாற்றியிருக்கிறார்கள். அங்கத்தினர்கள் அனைவரும் மன்றத்தினுடைய கண்ணியத்தை நல்ல விதத்தில் உயர்த்தியிருக்கிறார்கள் என்பதை எடுத்துச்சொல்லி, இப்படிப்பட்ட மன்றத்தில் ஐந்தாண்டுகள் இருப்பதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்ததை உண்மையாகவே என்னுடைய வாழ்நாளிலேயே பெருமைக்குரிய பகுதியாகக் கருதிக்கொள்ளுகிறேன். இவ்வளவு நல்லவர்களோடு ஐந்தாண்டுகள் பழகுவதற்கு எனக்கு வாய்ப்புத் தரப்பட்டது. இனியும் அப்படிப்பட்ட வாய்ப்புகள் தொடர்ந்து தரப்படுவதற்கு அச்சாரம் என்ற முறையிலே நான் கருதிக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை இந்த அளவிலே நிறுத்திக்கொள்கின்றேன்.

**SRI V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த ஐந்தாண்டுக் காலத்தில் கடைசியாக பேசும் சந்தர்ப்பம் இன்று எனக்குக் கிடைத்திருக்கிறது. முக்கியமாக இந்த ஐந்தாண்டுக் காலமாக நாம் என்ன பணி செய்திருக்கிறோம், எந்த முறையிலே செய்திருக்கிறோம் என்பதைப் பற்றியெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும். இந்தக் கடைசிக் கட்டத்திலாவது நம்முடைய அமைச்சர்கள் எல்லோரும் இந்தச் சபையில் அமர்ந்திருப்பார்கள், அங்கத்தினர்கள் எல்லோரும் வந்திருப்பார்கள், அவர்கள் எல்லோரும் ஒவ்வொருவருடைய பேச்சையும் கேட்பார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனல் ஏமாற்றம் அடைந்தேன்.

இந்த ஐந்தாண்டுக் காலத்தில் நாம் செய்து வந்த பணியைப் பற்றி நாம் பேசவேண்டியவர்களாக இருக்கிறோம். 1957-ம் ஆண்டிலிருந்து இவ்விடத்தில் சபாநாயகராக வீற்றிருந்த காலஞ் சென்ற டாக்டர் யு. கிருஷ்ண ராவ் அவர்களுடைய மறைவைப் பற்றி நாம் வருந்தாமல் இருக்க முடியாது. என்னைப் பொறுத்த வரையில், அவர் எனக்கு ஒரு நெருங்கிய நண்பர். பல வருஷங்களாகத் தெரிந்தவர். அவர் திடீரென்று மறைந்ததைப்பற்றி நாமெல்லோரும் வருத்தப்படவேண்டியவர்களாக இருக்கிறோம். அவர் நல்ல முறையில் பணியாற்றி வந்தார். 1952-ம் வருஷத்திலே அமைச்சர் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு அவர் நல்ல பணியாற்றி வந்தார். பிறகு சபாநாயகராக இருந்து அந்தப் பதவியிலும் அவர் நல்ல கண்ணியத்துடன் பணியாற்றி வந்தார். அவருடைய சேவையை நாம் என்றும் மறக்க முடியாது என்று முதன் முதலாகச் சொல்லிக்கொள்கின்றேன்.

இப்பொழுது டெபுடி ஸ்பீக்கராக இருக்கும் தாங்களும் 1952-ம் வருஷத்திலிருந்து உதவி சபாநாயகராக இருந்து, அடிக்கடி சபா நாயகருடைய பதவியையும் ஏற்று, நல்ல முறையில் இங்கு பணியாற்றி வந்திருக்கிறீர்கள். உங்களுடைய சேவையையும் நான் பெரிதும் பாராட்டுகின்றேன்.

ஜனநாயகம் நல்ல முறையிலே நடக்க வேண்டுமானல், உருப்படியான எதிர்கட்சி அமைந்திருக்க வேண்டும் என்பதைப்பற்றி நம்முடைய அங்கத்தினர்கள் எல்லோரும் பேசினர்கள். உண்மை. 1952-ம் வருஷத்திலே, மொழிவழி மாகாணங்கள் ஏற்படுவதற்கு முன்பு, இந்தச் சபையில் 360-க்கு மேற்பட்ட அங்கத்தினர்கள் இருந்தார்கள். அப்பொழுது எதிர்க்கட்சி பலமாக இருந்தது. நிரந்தரமான சர்க்கார் இவ்விடம் அமையுமா என்பதே யோசனையில் இருந்தது. கம்யூனிஸ்டுக் கட்சியில் மட்டுமே சுமார் 62 அங்கத்தினர்கள் அப்பொழுது இருந்தார்கள். எதிர்க்கட்சியில் இருந்தவர்கள் எல்லோரும் பலமான எதிர்கட்சி (effective opposition) ஆக இருந்து நன்ருகப் பணியாற்றினர்கள். அப்பொழுது நிரந்தரமான சர்க்கார் அமைப்பதற்கு சில கட்சிகளெல்லாம் கூட்டு சேர்ந்து, ராஜாஜி அவர்கள் தலைமையில் இவ்விடம் ஒரு சர்க்காரை அமைத்து நடத்திவந்தார்கள். அப்பொழுது

15th December 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

எதிர்க்கட்சிகள் பலமாக இருந்த காரணத்தால் நல்லபடியாக சர்க்கார் நடந்தது. அம்மாதிரியான சர்க்கார்தான் நிறுவப்பட வேண்டுமென்று நம்முடைய நண்பர் திரு. அண்ணாதுரை அவர்கள் சொன்னார். உண்மை. இன்றைக்கு நிரந்தரமான சர்க்காரை அமைக்கக்கூடிய அளவுக்கு ஆளும் கட்சி இருந்தாலுங்கூட, எதிர்க் கட்சிகளுக்கு வாய்ப்புகளெல்லாம் கொடுக்கவேண்டும். எதிர்க் கட்சிகள் வளரவேண்டுமென்று ஒரு புறம் சொல்லிக்கொண்டு, மறு புறம் அவர்களை நசுக்குவதற்கான வழிகளையெல்லாம் செய்யக் கூடாது என்றுதான் நான் ஆளும் கட்சிக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

"Minority must have its say and majority will have its way" என்று சொல்வார்கள். அது உண்மை. எது எப்படியிருந்த போதிலும், ஒரு நல்ல உருப்படியான எதிர்கட்சி இந்தத் தேர்த லுக்குப் பிறகு வந்தால்தான் இவ்விடத்தில் ஆட்சி நன்றாக நடக்கும் என்பதை நான் மறுமுறை சொல்லிக் கொள்ள விரும்பு கிறேன். இந்த ஐந்தாண்டுகளில் நடந்த நடவடிக்கைகளைப் பார்ப்போமானால், முக்கியமாக இந்தச் சட்டசபையில் 'நான்-அபிஷியல் டேஸ்' (Non-official days) ரொம்பவும் குறைவு. போதுமான 'நான்-அபிஷியல் டேஸ்' ஒதுக்கப்படாததன் காரண மாக எதிர்க்கட்சிகள் தெரிவிக்கவேண்டிய குறைகளையெல்லாம் சொல்ல முடியாமல் போய்விட்டது. 'நான்-அபிஷியல் டேஸ்' ஒதுக்கி, பிரச்னைகளை விவாதிக்கும்போதுதான் நிர்வாகத்திலே இருக்கும் ஊழல்கள், இன்னும் பலவிதமான குறைகளை எடுத்துக் காட்டுவதற்கு எதிர்த் தரப்பில் உள்ளவர்களுக்கும் சந்தர்ப்பம் கிடைக்கும்.

தவிர, கனம் அங்கத்தினர்கள் கொடுத்திருக்கும் கேள்விகள் பலவற்றுக்கு பதில் வருவதில் தாமதமாக இருந்துகொண் டிருந்தது. காலா காலத்தில் பதில் வருவதில்லை. நாள் கழித்து கேள்விக்குப் பதில் வந்தால் அதன் சாரம் போய்விடுகிறது.

சர்க்கார் மசோதாக்கள் திடீர் திடீர் என்று கொண்டுவரப் படுவதால் அவைகளை விவாதிப்பதற்குப் போதுமான சந்தர்ப்பம் கிடைப்பதில்லை. சர்க்கார் மசோதாக்களை கெஜட்டில் பிரசுரம் செய்து, பொது மக்களுடைய அபிப்பிராயம் என்ன என்று கேட்க சந்தர்ப்பம் இல்லாமல் போய்விட்டது. அதற்கடுத்தபடியாக, மசோதாக்களுக்குத் திடீர், திடீர் என்று திருத்தங்கள் கொண்டு வந்து அவைகளை உடனடியாக நிறைவேற்றும்படியான கட்டங் களும் ஏற்பட்டன. இவைகளெல்லாம் ஜனநாயகத்திற்கு அவ்வளவாக உகந்ததல்ல என்பதைப்பற்றி நான் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அவைகளையெல்லாம் தடுப்பதற்கு வேண்டிய வழிகளைச் செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக, அமைச்சர்கள் எல்லோரும் பிரதி மாதமும் அனேக நாட்கள் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருந்தும், சட்ட சபை கூடும் தருணத்திலாவது அவர்கள் இங்கே அமர்ந் திருக்கவேண்டுமென்ற கடமையுணர்ச்சி அவர்களுக்கு வர

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [15th December 1961

வேண்டும். ஏதோ முக்கியமான அவசர வேலை, ஏதோ தவிர்க்க முடியாத வேலை இருந்தாலொழிய அவர்கள் எல்லோரும் இங்கு இருக்கவேண்டும். இன்றைய பரிதாபகரமான நிலை என்ன வென்றால், இந்த கடைசி நாள் கூட்டத்திலாவது அனேக அமைச்சர்கள் முதல் அமைச்சர் உட்பட இங்கு இருப்பார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால், ஏமாற்றம் அடைந்தேன். பல விதமான வேலைகள், தேர்தல் வேலைகள், பிரசாரம் செய்ய வேண்டிய வேலைகள் அங்கத்தினர்கட்கு இருக்கலாம் என்றாலும் அமைச்சர்களைப் பொறுத்த மட்டில் நான் சொல்கிறேன். விடை பெற்றுக் கொள்ளும் இந்தக் கடைசி நாளிலாவது எல்லோரும் இங்கு இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். அதே மாதிரி ஒவ்வொரு கட்டத்திலும் சட்டசபை கூடும்போது அனேக அமைச்சர்கள் இவ்விடம் இருப்பதே கிடையாது. இப்படி ஐந்து ஆண்டுகளாக நாம் பணியாற்றி வந்திருக்கிறோம். இவைக ளெல்லாம் ரொம்பவும் வருத்தப்படவேண்டிய விஷயம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

அடுத்தபடியாக, எதிர்க்கட்சிகளுக்குப் போதுமான வாய்ப்புக் கள் கிடைக்கவில்லை. நான் தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் மற்ற வெளிநாடுகளிலும் காமன்வெல்த் பார்லிமெண்டரி டெலிகேஷன் விஷயமாகப் போயிருந்தபோது அங்குள்ள நிலைமைகளைக் கவனித்தேன். அங்கு பல வசதிகள் செய்திருக்கிறார்கள். நம் ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் எதிர்க் கட்சிகளுக் குத் தனித்தனி அறையும், டெலிபோன் வசதியும், கொடுக்கப் படவேண்டும். ஹாஸ்டலிலும் போதுமான வசதிகளெல்லாம் அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். நம் பாரத நாட்டில் அநேக மாநிலங்களில் நல்லபடியாக வசதி செய்து கொடுத் திருக்கிறார்கள். ஹாஸ்டல் வசதி, உணவு வசதி, எல்லோரும் கூடி பேசுவதற்கான அறை, இப்படிப் பல வசதிகளைச் செய்திருக் கிறார்கள். ஆனால் நம் ராஜ்யத்தில் அந்த அளவுக்குச் செய்ய வில்லை என்பதை நான் மிகவும் வருத்தத்துடன் தெரிவிக்க விரும்பு கிறேன். லெஜிஸ்லேசர் தான் ஒரு (sovereign body) ஸாவரின் பாடி. அதனுடைய அங்கத்தினர்களில் சில பேர்கள் திறமையற்றவர்களாக இருக்கலாம் என்றாலும், சுமார் ஒரு லட்சம் வாக்காளர்களுக்குப் பிரதிநிதியாக வந்திருப்பதால் அவர்களில் ஒவ்வொருவரும் பொறுப்புள்ளவர்களாக இருக்கி றார்கள் அவர்களுக்கு வேண்டிய சௌகர்யங்கள் எல்லாம் செய்ய வேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். சட்ட சபை அங்கத்தினராக வந்து பணியாற்றுவது என்பது சாதாரண காரியம் அல்ல. பொறுப்புணர்ச்சியோடு அவர்கள் பணியாற்ற
1.00 p.m. வேண்டும். ஆளும் கட்சியாக வருகிறவர்கள் அடுத்த தேர்தலுக்குப் பிறகாவது இவைகளைக் கவனித்து நல்லபடி வசதி செய்துதர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எதிர்க்கட்சிகள் எல்லோரும் ஒன்று சேர்ந்து இந்த அவையில் நல்ல முறையில் பணியாற்றியிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. பலவிடங்களில் பார்த்திருக்கிறோம். நாற்காலி

15th December 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

மேஜைகளை உடைத்து வெளியேற்றம் செய்வது, கூச்சல் போடுவது என்றெல்லாம் நடைபெற்று இருக்கிறது. ஆனல் இங்கே சபையின் கண்ணியத்திற்குக் குறைவு ஏற்படாத வகையில் நடந்துகொண்டிருக்கிறார்கள். எங்களுக்குள் அபிப்பிராய பேதம் இருந்தாலும் நல்ல முறையில் எதிர் கட்சிகள் செயல்பட எல்லோரும் உதவியிருக்கிறார்கள். இதைப் பெருமையுடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த ஐந்தாண்டு காலத்தில் பல நல்ல சட்டங்களை நாம் செய்திருக்கிறோம். முக்கியமாக பஞ்சாயத்து ஆட்சிச் சட்டம், உச்சவரம்புச் சட்டம் முதலியவற்றையெல்லாம் நன்றாகப் பரிசீலனை செய்தே நிறைவேற்றியிருக்கிறோம். சர்க்கார் வருவாயை அதிகப்படுத்தி இருக்கிறோம். கனம் நிதி அமைச்சர் சொன்னபடி 100 கோடி ரூபாய்க்கு நம்முடைய வரவுசெலவுத் திட்டம் உயர்ந்திருக்கிறது. எவ்வளவோ காரியங்களைச் செய்திருக்கிறோம் என்றாலும் இன்னும் செய்யவேண்டிய காரியங்கள் பல இருக்கின்றன. இவற்றோடு ஒப்பிடும்போது நாம் செய்திருப்பது மிகவும் குறைவு. இன்னும் ஆட்சியாளர்கள் அங்கங்கே ஏற்படுகிற குறைகளைப் போக்கவேண்டியது மிகவும் அவசியம். அதில் அமைச்சர்கள் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும்.

நம்முடைய நிதி அமைச்சர் அவர்களை எடுத்துக்கொண்டால் 1952-ம் ஆண்டிலிருந்து இங்கே பணியாற்றி வந்திருக்கிறார்கள். கல்வி அமைச்சராகவும், நிதி அமைச்சராகவும் நல்ல முறையில் பணியாற்றியிருக்கிறார் என்பதை யாரும் மறுக்க முடியாது. சில சமயங்களில் அவருக்குக் கோபம் வரும். உடனே தணிந்துவிடும். இன்று அவர் மத்திய சபைக்குப் போகப் போகிறார் என்கிறபோது ஒரு பக்கம் சந்தோஷம் என்றாலும் அவருடைய சிறப்பான சேவை நம் மாநிலத்திற்குக் கிடைக்காமல் போகிறதே என்று வருத்தம் தான். அவரைப்போன்ற திறமையானவரே நமக்கும் வரவேண்டும். மத்திய அரசுக்குப் போனல்கூட அங்கும் அவருக்கு அமைச்சர் பதவி கிடைக்கவேண்டும் என்பது என் அவா.

நம்முடைய முதல் அமைச்சர் அவர்கள் இந்தச் சட்டசபையில் அதிகமாகப் பேசுவதே இல்லையென்றாலும் வெளியில் இருந்தபடி பல நல்ல பணிகளைச் செய்துவந்திருக்கிறார். தினமும் நூற்றுக்கணக்கான மக்களைப்பார்க்கிறார். அவர் சொல்லும் சுலோகம் நமக்குத் தெரியும். "பார்க்கலாம், ஆகட்டும்" ஆகிய இதையே மற்ற அமைச்சர் அவர்களும் பின்பற்றுவார்களோ என்னமோ? சட்டசபை நடக்கிற காலத்திலாவது மற்ற அமைச்சர்களும், முதல் அமைச்சரும் இங்கே இருப்பது அவசியம். அவ்வப்போது அப்படி இல்லாமல் இருப்பது தான் கொஞ்சம் எனக்கு வருத்தம்.

அடுத்தபடியாக நமது லெஜிஸ்லேசர் செக்ரடேரியட்டைப்பற்றி நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். கட்சிச் சார்பு இல்லாமல் எல்லா கட்சி அங்கத்தினர்களுக்கும் வேண்டிய சௌகர்யங்களை அவ்வப்போது செய்துகொடுத்து மிகவும் திறம்பட பணியாற்றியிருக்கிறார்கள். அவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ப்ரஸ். அதாவது பத்திரிகைகள். சபை நடவடிக்கைகளை எல்லாம் நல்ல முறையில் நம் ராஜ்யத்தில் உள்ள பத்திரிகைகள் ரிப்போர்ட் செய்து வந்திருக்கின்றன. சென்னைப் பத்திரிகையாளருக்கு எப்போதுமே அகில இந்திய ரீதியில் ஒரு நல்ல பெயர். அந்தப் பெயருக்கு ஏற்ற வகையில் தான் அவர்களும் திறம்படப் பணியாற்றி வந்திருக்கிறார்கள் என்று பெருமையுடன் சொல்லிக்கொள்கிறேன்.

ஆளும் கட்சிக் கொரடாவைப்பற்றி நான் அதிகம் சொல்ல வேண்டியது இல்லை. அவர்கள் 1957-ம் வருஷத்திலிருந்து பணியாற்றி வருகிறார்கள். கொரடாவாக இருப்பது கொஞ்சம் சிரமம். எல்லா அங்கத்தினர்களையும் திருப்திப் படுத்தவேண்டும். பேச தங்கள் தங்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கவில்லை என்று பலர் அவரிடத்தில் அதிருப்தி அடையக்கூடும். அவர் தம்முடைய உரையில் சொன்னபடி நாங்கள் எல்லோரும் அவர்களுடன் ஒத்துழைத்ததோடு அவரும் எங்களுடன் ஒத்துழைத்து அவ்வப்போது கலந்து பேசி ஒரு முடிவு செய்வார்கள். வாக்கவுட் (வெளிநடப்பு) உண்டா இல்லையா என்பதைக்கூட அவ்வப்போது விஜிலண்டாகப் பார்வையிட்டு வருவார்கள். சில சமயம் சொல்வோம். சில சமயம் சொல்லமாட்டோம். ஆக பொதுவாக எல்லோரும் ஒரு டீம் ஸ்பிரிட்டாகப் ( ஆக) பணியாற்றி வந்திருப்பது நாமே சந்தோஷப்படவேண்டியதாகும். தேர்தலுக்குப் பின் சில பேர் வரக்கூடும். சில பேர் தேர்தலில் நிற்காமல் வராமலும் இருக்கக்கூடும். எப்படியோ இனி வருகிற சட்டமன்றத்திலும் கூட மகாத்மா காந்தி காட்டிய வழியில் நாம் எல்லோரும் ஒற்றுமையுடன் தேச ஐக்கியத்தைப் பாதுகாக்கும் வழியில் பணியாற்றவேண்டும், எல்லோரும் நாட்டுக்காக அதாவது நாட்டு மக்களுக்காகப் பணியாற்றவேண்டும். பொதுப் பணியில் சிறப்பாக எல்லோரும் ஈடுபட்டு நீடுழி காலம் வாழவேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்தித்துக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இங்கு நடந்த விவாதத்திற்கு பதில் சொல்லக்கூடிய நிலையில் நான் இல்லை. இந்தச் சபையிலிருந்து விடை பெற்றுச் செல்லக்கூடிய கட்டத்தில் நான் இருக்கிறேன். சென்ற பத்து ஆண்டுகளாக இந்த சபையில் பணியாற்றக் கூடிய பெரும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததை, அதை ஒரு பெரும் பாக்கியமாகவே நான் என்றும் கருதுவேன். எனது வாழ்க்கையை இது வரை எடுத்துக் கொண்டால், மூன்று கட்டங்களை நான் எப்பொழுதும் பெருமையாகக் கொள்ள முடியும். ஒன்று, நான் மாணவனாக இருந்த காலம். இரண்டாவதாக, நான் சிறையில் இருந்த காலம். மூன்றாவதாக, இந்த சட்டசபையில் பணியாற்றிய காலம். சிறையில் இருந்த காலத்தில் நான் மாணவனாகத்தான் இருந்து வந்தேன். இங்குள்ள அங்கத்தினர்கள் எல்லோருக்கும் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன், இந்த சபையிலும் நான்

15th December 1961] [Sri C. Subramaniam]

ஒரு மாணவனுக இருந்துதான் பல பாடங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறேன். இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு கனம் கோவிந்தசாமி அவர்கள் பேசியபோது குறிப்பிட்டார், எங்களால்தான் இந்தக் கோபத்தை ஓரளவு அடக்கக்கூடிய நிலை வந்திருக்கிறதென்று சொன்னார்கள். அதை முழுக்க முழுக்க ஒப்புக்கொள்ள நான் தயங்கவில்லை. இந்தச் சபையில் பத்து வருடமாக எனக்கு கிடைத்திருக்கக்கூடிய அனுபவம் வாழ்க்கையில் பயன் பெறக்கூடிய அனுபவமாயிருக்கிறது என்பதை எங்கும் தயங்காமல் சொல்லிக் கொள்ள முடியும். அத்துடன் எனக்கு இங்கு பணியாற்றுவதற்கு நல்ல வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த, முதலில் வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் ராஜாஜி அவர்களுக்கும் அதற்குப் பிற்பாடு வந்த மந்திரிசபையில் முதல் அமைச்சராக இருந்து வரும் காமராஜ் அவர்களுக்கும் நான் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். முழுப் பொறுப்பையும் ஏற்று இந்த சபையில் பணியாற்றும் வாய்ப்பை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தார்கள். நான் இங்கு வருவதற்கு முன்பு பாராளுமன்ற சபையில் இருந்திருந்தாலும் அங்கு நான் பாக் பெஞ்சர் தான். இங்கு வந்த பிறகுதான் பொறுப்புக்களை ஏற்றெடுத்து பணியாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அதன்காரணமாகத்தான் ஓரளவு நாட்டிற்கு சில சேவைகளை செய்ய முடிந்தது, மக்களுக்கும் சில சேவைகளை செய்ய முடிந்தது. அதேபோல் மற்றவர்களுக்கும் வாய்ப்பு ஏற்பட்டால் அதை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள என்னைவிட தகுதி வாய்ந்தவர்கள் பலர் இந்தச் சபையில் இருக்கிறார்கள், சென்ற சபையிலும் இருந்திருக்கிறார்கள் என்பதை நான் ஏதோ சம்பிரதாயத்திற்காக அல்ல; உண்மையாகவே ஒப்புக் கொள்கிறேன். சந்தர்ப்பங்கள் கிடைக்கிற காலத்தில் தான் சிலருக்கு ஓரளவு முன்னுக்கு வரக்கூடிய வாய்ப்பு ஏற்படுகிறது. ஆகவே நீங்கள் எல்லோரும் பாராட்டக்கூடிய அளவிற்கு நான் ஓரளவு பணியாற்றி வந்திருக்கிறேன் என்று சொன்னால், இந்த வாய்ப்பு கிடைத்ததுதான் காரணம். இதே வாய்ப்பு மற்றவர்களுக்கும் கிடைத்திருந்தால் இதைவிட சிறப்பாக பணியாற்றியிருக்கலாம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அதோடு, சட்டசபையில் பணியாற்றுவதில் எதிர் கட்சியில் இருக்கக்கூடியவர்கள், எதிர் கட்சியில் இருக்கக்கூடிய தலைவர்கள்தாம் பெரும்பாலும் இந்தப் பணியை ஆற்றுவதற்கு உதவுகிறார்கள் என்பதை என் பத்து வருட அனுபவத்தில் நான் சொல்லிக்கொள்ள முடியும். அம்முறையில் சட்டசபை காரியங்களைச் செய்வதற்கு உதவியாயிருந்த எல்லாக் கட்சித் தலைவர்களுக்கும், எதிர்கட்சி அங்கத்தினர்களுக்கும் நான் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆனால் அவ்வாறு இயங்குவதற்கு என் கட்சியில் உள்ளவர்களுக்கு என் பேரில் நம்பிக்கை இல்லாவிட்டால் நான் ஒன்றுமே செய்திருக்க முடியாது. ஆகவே நம்பிக்கையும், ஆதரவையும் கொடுத்த எனது கட்சி அங்கத்தினர்களுக்கும் நான் எனது நன்றியைத் தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறேன். சென்ற பத்தாண்டுகளில் பல நெருக்கடியான கட்டங்கள் வந்திருக்கின்றன.

அக்கட்டங்களில் எல்லாம் நிலைமையைச் சமாளித்து மேலும் மேலும் முன்னேறிச் செல்லக்கூடிய ஒரு சக்தியை கொடுத்தவர்கள் எனது கட்சியைச் சேர்ந்த எனது நண்பர்கள். அதை நான் என்றைக்கும் மறந்துவிட முடியாது. அடுத்து வருகிற சபையிலும் நிர்வாகத்தை ஏற்று நடத்தக்கூடியவர்கள் மக்களின் நன்மைக்காக தொடர்ந்து பாடுபட்டு வருவார்கள் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. பல கட்சிகளைச் சார்ந்திருப்பவர்கள் இங்கு வந்து அமர்ந்திருக்கிறார்கள். அந்த அந்த கட்சிக் கொள்கைகளை கொண்டவர்கள் அந்த அடிப்படையில் தேர்தலில் நின்று வந்திருக்கக்கூடியவர்கள். அந்தக் கொள்கைகளை எடுத்துச் சொல்வதற்கு உரிமையுண்டு என்பது மட்டுமல்ல, அவர்களது கடமையும் கூட. அதே சமயத்தில் நமது கொள்கைகளை மட்டும் பிடிவாதமாகப் பிடித்துக்கொண்டு அந்த அடிப்படையில்தான் காரியங்கள் நடைபெறவேண்டுமென்று பிடிவாதமாக இருப்போமானால் எந்தக் காரியமுமே நடைபெற முடியாது. ஆகவேதான் சட்டசபையில் பேசி ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுத்து காரியங்களை நடத்திச் செல்வது அவசியமாகிறது. அந்த முறையில் இந்த சபை தொடர்ந்து பணியாற்றி வரும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் பேசும்போது மந்திரிகள் ஆற்றல் தெரிய வேண்டுமென்றால், அல்லது எதிர்க்கட்சிக்காரர்கள் நல்ல பலன் தரக் கூடிய

மென்றால், அல்லது எதிர்க்கட்சிக்காரர்கள் நல்ல பலன் தரக் கூடிய

முறையில் சட்டசபை பணியில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமாக அதிகமாக இருக்க வேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்தார்கள். அந்தக் கருத்தில் நான் மாறுபடுகிறேன் என்று நான் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். கனம் சின்னதுரை அவர்கள் சொன்னமாதிரி, பஞ்ச பாண்டவர்களாக ஐந்து பேர்கள் இருந்தால் போதும், ஒரு அரசாங்கத்தின் கண்ணில் விரலை விட்டு ஆட்டிவைக்க முடியும். எப்பொழுதுமே எதிர்கட்சி ஆளும் கட்சியைவிட எண்ணிக்கையில் குறைவாகத்தான் இருக்கமுடியும். வோட்டு போடும் நிலையில் பார்க்கும்போது சர்க்கார் கட்சிக்கு வோட்டு அதிகமாக வந்தால்தான் அது சர்க்காராக இருக்க முடியும். ஆகவே எதிர்கட்சியின் எண்ணிக்கை குறைவாகத்தான் இருக்கும். ஒரு சர்க்கார் எதிர்கட்சியைப் பார்த்து பயப்பட வேண்டுமென்றால் எதிர்கட்சி என்ன சொல்லப் போகிறார்களோ என்ற நிலையிருக்க வேண்டுமென்றால், இங்குள்ள நடவடிக்கைகளை நன்கு கவனித்து, வரக்கூடிய விஷயங்களை நன்கு அலசி ஆராய்ந்து பார்த்து சொல்லக்கூடிய திறமையுள்ளவர்கள் ஒரு சிலர் எதிர் கட்சியில் இருந்தால் போதும். மந்திரிகளிடம் நன்கு வேலை வாங்கிவிடலாம். அந்தளவு உழைப்பதற்கு தயாராயிருக்க வேண்டும். குற்றம் சொல்வதாக இதை எடுத்துக் கொள்ளக் கூடாது. அந்தளவு விஷயங்களை நன்கு தெரிந்துகொண்டு ஒரு சிறிய குற்றம் இருந்தாலும் அதைக் கண்டு பிடித்து விடுவார்களோ என்ற பயம் மந்திரிகளுக்கு இருந்தால் காரியங்கள் சரியாகச் செய்ய முடியும். இதை யார் கண்டு பிடிக்கப் போகிறார்கள் என்ற

15th December 1961] [Sri C. Subramaniam]

தைரியம் மந்திரிகளுக்கு வந்துவிட்டால் அப்பொழுது மந்திரிகள் மட்டுமல்ல, அதிகாரிகள் கூட அந்த அளவிற்குத்தான் இருக்கும் நிலை ஏற்படும். ஒரு சிறு தவறு ஏற்பட்டாலும் அது அம்பலமாகி விடும், எதிர்கட்சியினர் அதை எடுத்துத் தாக்கிவிடுவார்கள், கட்சி வாதத்திற்காக மக்கள் உணருகிற முறையில் எடுத்து சொல்லும் போது குற்றம் செய்தவர்கள்கூட அதை உணரும் முறையில் எடுத்துச் சொல்லும் ஆற்றல் உள்ள எதிர்கட்சி அங்கத்தினர்கள், தலைவர்கள் இருக்கும்போது கட்டாயம் நிர்வாகம் திறம்பட நடை பெற முடியும், நேர்மையாக நடப்பதற்கு அவர்கள் உதவ முடியும் என்ற கருத்தைத்தான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எதிர் கட்சியைப் பொறுத்தவரை, எண்ணிக்கையல்ல அதற்கு பலம் கொடுப்பது என்பதை நான் மிகவும் பணிவுடன் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். சர்க்காருக்கு எண்ணிக்கை வேண்டும், மெஜா ரிட்டிக்கு மேல் இருந்தால்தான் பணியாற்ற முடியும், இல்லாவிடில் பணியாற்ற முடியாது. இதைத்தான் நாம் நல்ல முறையில் உணர்ந்துகொள்ளவேண்டும். அந்த முறையிலே சென்ற 10 ஆண்டுகளிலே மந்திரிகள், நிர்வாகத்தில் இருக்கக் கூடியவர்கள், திறம்பட காரியத்தை நடத்தவேண்டுமென்று உணர்ச்சியூட்டக் கூடிய முறையில் எதிர் கட்சி அங்கத்தினர்கள், எதிர் கட்சித் தலை வர்கள் எல்லோரும் பணியாற்றி வந்திருப்பதற்கு எனது பாராட்டு தலைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இப்போது எதிர் கட்சித் தலைவராக இருக்கக் கூடிய கனம் வி. கே. ராமசுவாமி முதலியார் அவர்கள் இந்தச் சபையில் 10 ஆண்டு காலமாகப் பணியாற்றியிருக்கிறார்கள். இந்த சபையிலே எதிர்க்கட்சித் தலைவராக இருந்தும் பணியாற்றியிருக்கிறார்கள். அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். அவர்கள், நிர்வாகம் திறம்பட நடைபெறவேண்டும், நாட்டில் இருக்கக் கூடிய மக்களின் நலன் பாதுகாக்கப்பட வேண் டும் என்று கண்ணும் கருத்துமாக இருந்து பணியாற்றி வந்திருக் கிறார்கள்.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களுக்கும், அவர் கள் கட்சியைச் சார்ந்திருக்கிற மற்ற அங்கத்தினர்களுக்கும் எனது நன்றியைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள் சொன் னார்கள், அவர்களுக்கு இருக்கக் கூடிய கொள்கையைப் பற்றி. எங்களுக்கு இருக்கக்கூடிய கொள்கையிலும் அவர்களுக்கு இருக் கக் கூடிய கொள்கையிலும் இருக்கக்கூடிய கருத்து வேறுபாடு பற்றி குறிப்பிட்டுச் சொன்னார்கள். கொள்கை வித்தியாசம் இருக் கிறது—அதை யாரும் மறுக்க முடியாது. இருந்தாலும் அவர் களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன், பிரிவினை என்பதை ஒரு பக்கம் ஒதுக்கி வைத்து விட்டு மற்றபடி நம் நாட்டு நன்மைக்கு, மக்களுடைய மேன்மைக்கு அவர்கள் சொல்லக் கூடிய கருத்துக்களில் நான் என்றைக்கும் அவைகளை வரவேற்றிருக் கிறேன். அவர்கள் சொல்வது, இந்த முன்னேற்றங்களை நாடு பிரிந்தால்தான் அடைய முடியும் என்பது. இது மாதிரி நினைத்துக்

கொண்டு குற்றம் கண்டுபிடிக்கும்போது கூட, குறைகளை எப்படி நீக்க முடியும் என்று பணியாற்றுவதற்கு எங்களுக்கு அது உதவியாக இருந்தது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆனால், ஏதோ ஐந்து வருஷத்திற்கு முன்னால் கேட்டேன், மிரட்டினேன் என்று சொன்னார்கள். நாம் எல்லோரும் ஒரே குடும்பமாக இருக்கக் கூடிய காரணத்தால் ஒரு சமயத்தில் கெஞ்சவும் வேண்டியதாக இருக்கிறது, ஒரு சமயத்தில் மிரட்டவும் வேண்டியிருக்கிறது, ஒரு சமயத்தில் தாழ்ந்து கேட்டுக்கொள்ளவும் வேண்டியிருக்கிறது. இறுதியாக விடை பெற்றுக்கொள்ளும் காலத்திலும் மிகப் பணிவுடன் சொல்லிக்கொள்வது, பிரிவினைக் கொள்கையால் நாட்டுக்கு நல்லது வராது என்பது எனது உறுதியான நம்பிக்கை. இந்தக் கொள்கையை விட்டுவிட்டு, நல்ல உறுதியான அரசியல் கட்சியாக, நாட்டிலே பல திட்டங்களை நிறைவேற்ற உதவக் கூடிய எதிர்க் கட்சியாக விளங்கினால் இன்னும் நல்ல பலன் ஏற்படும். இன்றைக்கு அது விழலுக்கு இறைத்த நீராகப் போய்க்கொண்டிருப்பதால் வருத்தம் ஏற்படுகிறது. எனக்குக் கோபம் வருகிறது என்று சொன்னால், கோபம் வருவது அதன் காரணமாகத்தான், இதைப் போல பேசச் சக்தியுள்ளவர்கள், சக்தியை வீணாகச் செலவழித்துக்கொண்டிருக்கிறார்களே என்று வருத்தப்படவேண்டியிருக்கிறது. இதிலே யார் சரியான கருத்தைக் கொண்டிருக்கிறார்கள் என்று நாம் முடிவு செய்வதற்கில்லை. பின்னால் வரக் கூடிய சந்ததிகள் முடிவு சொல்லப்போகிறார்கள்—வரலாறு முடிவு சொல்லப்போகிறது. இதனை விவாதித்துப் பிரயோசனம் இல்லை என்று நான் உணர்ந்தாலும் கூட, எனக்கு அவர்கள் பேரில் இருக்கும் அக்கறை காரணமாக, தமிழ்நாட்டின்பேரில் இருக்கும் அக்கறை காரணமாக, தமிழ் வாலிபர்கள் மீது இருக்கும் அக்கறை காரணமாக, தமிழ்நாடு ஈடு இணையற்று இயங்கவேண்டும் என்ற அக்கறை காரணமாக இதைச் சொல்லவேண்டுமென்று, இந்த வாக்குகள் வந்தன என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். இப்போது, இறுதியாக விடை பெற்றுக் கொள்ளும் காலத்திலும் கூட இதைச் சொல்கிறீர்களே என்று வருத்தப்பட மாட்டார்கள் என்று நான் நினைக்கிறேன். அவர்கள் எங்களை போய் வீட்டிலே உட்கார்ந்து ஆராய்ந்து பார்க்கும்படி சொன்னதைப் போல, அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன், அலைச்சலில் மாட்டிக் கொள்ளாமல், ஆற அமர, எங்காவது உட்கார்ந்து, பிரிவினைக் கொள்கையால் என்னென்ன விளைவுகள் ஏற்பட்டிருக்கின்றன, இனிமேலாவது ஏதாவது நன்மைகள் ஏற்படுமா என்று அவர்களும் சிந்திக்கவேண்டும் என்று அவர்கள் எனக்கு புத்திமதி சொன்ன காரணத்தினால் அவர்களுக்கு நானும், அனுமதி இருக்குமோ இல்லையோ, சொல்லிக்கொண்டு யோசிக்கலாமா என்று சிந்தனை செய்யவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஒவ்வொருவரும் தான் சாதித்திருக்கும் காரியங்களைப் பற்றி, அவர்களுடைய திட்டங்களைப் பற்றி, கொள்கைகளைப் பற்றி இவ்வாறு சிந்தனை செய்வது முக்கியமானது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அவ்வாறு சிந்தனை செய்தால்—எனக்கு

நம்பிக்கை இருக்கிறது—இது கொஞ்சம் தவறுதான், இதைவிட வேறு வழியில சென்றும் தமிழ்நாட்டை முன்னேற்றி நடத்திச் செல்ல முடியும் என்ற முடிவுக்கு வருவார்கள் என்று திடமாக —உறுதியாக—நம்புகிறேன். அந்த நம்பிக்கை—எனக்கு இருக்கக் கூடிய நம்பிக்கை—உறுதிப்படக்கூடிய முறையில் பின்னல் நிகழ்ச் சிகள் ஏற்படவேண்டுமென்றும் எனது ஆசையைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஆகையால் நமக்குள் கருத்து வேறு பாடுகள் இருந்தாலும், நான் பட்ஜெட் உரையிலே சொன்னது போல ஒன்றுபட்ட கருத்துக்கள் கொண்டவர்கள் நாம். நம் மக்கள் உயரவேண்டும், அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர வேண்டும், நம் நாடு நல்ல முறையில், எல்லோரும் போற்றக்கூடிய முறையில் உயரவேண்டும் என்பதிலே கருத்து வேற்றுமை இருக் கவே முடியாது. ஆகவே அந்த கருத்து ஒறுமைப்பாட்டுடன் இதுவரையில் பணியாற்றி வந்தது மட்டுமல்ல, தொடர்ந்து பணி யாற்ற ஒறுமைப்பட்ட கருத்து உதவவேண்டுமென்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கனம் கல்யாணசுந்திரம் அவர்கள் பற்றி அவர்களே சொன்னார் கள், கொள்கை அளவில் எவ்வளவு வித்தியாசப்பட்டு இருந்தா லும் நண்பர் என்ற முறையில் அவர்கள் சொன்னார்கள்; அரசிய லிலே, அதுவும் நிர்வாகப் பொறுப்பில் இருக்கும்போது நண்பர் கள் என்றாலும், உறவினர்கள் என்றாலும் எது சரியோ, அப்படி சரி என்று தோன்றுவதை அவர்கள் ஆதரிப்பார்கள் என்று நம்பு கிறேன். ஆகையால் அவர்கள் சொன்ன பல நல்ல யோசனை களாகக்கூட இருந்தாலும் எனக்கு ஏற்றுக்கொள்ள முடியாத காரணத்தினால்தான் அப்படிச் செய்திருப்பேன்—அதைத் தவிர வேறுவிதமாக இருக்க முடியாது என்று நம்புகிறேன். யோசித் துப் பார்த்ததில் எனக்கு ஒன்றும் ஞாபகத்திற்கு வரவில்லை அவர் சொன்னது போல. இருந்தாலும் அவர் பட்டியல் போட்டு வைத்திருக்கிறேன் என்று சொல்லுகிறார். இன்று இல்லாவிட்டா லும், அவர்கள் சொன்னதைப் பற்றி பார்த்து அவர் நினைப்பது தவறு என்று சொல்லும் நிலைமை இருந்தால் அவருக்கு அதை எடுத்து விளக்குகிறேன் என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

அதேமாதிரி கனம் சின்னதுரை அவர்களும் இங்கு வந்த பிறகு எனக்குப் பழக்கமானவர் அல்ல. இதற்கு முன்னால் காங்கிரசிலே என்னோடு இருந்து பணியாற்றியிருக்கிறார். நான் சிறை சென்ற போதுகூட என்னோடு இருந்திருக்கிறார். சென்ற 10 ஆண்டு காலத்தில் அவர் நல்ல முறையில் பணியாற்றி வந்திருக்கிறார். அவர்களுக்கும் எனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்வ துடன், அவர்களுக்கு நான் வேண்டியவன் என்கிற முறையிலே, அவர்கள் இன்னும் அதிகமாக முன்னுக்கு வரவேண்டுமென்று, இதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சாதாரணமாக மக்கள் அவரைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்றால் கொஞ்சம் முரட்டுத் தனமாக, தடித்தனமாகப் பேசுகிறார் என்று. அது கூடாது—அதை மாற்றிக்கொள்ளவேண்டும். சொல்வதிலே யும் எப்படி என்னை கோபப்படக்கூடாது என்று சொல்லுகிறார் களோ, அந்த மாதிரி நல்ல முறையில் எடுத்துச் சொல்லவேண்டும்,

[Sri C. Subramaniam] [15th December 1961

இன்னொன்று, பேசும்போதுகூட நாம்தான் நேர்மையாக உள்ளவர்கள், நமக்குத்தான் திறமை இருக்கிறது என்று மற்றவர்களை அலட்சியமாகப் பேசும்போது நாம பேசும் வார்த்தைக்குப் பலன் இல்லாமல் போய்விடுகிறது. நல்ல விஷயத்தைச் சொன்னாலும், அவர் சொல்லி நாம் ஏன் கேட்பது என்று மற்றவர்கள் எண்ணக் கூடிய நிலைமை வருகிறது என்று எடுத்துச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர்களிடத்தில் இருக்கக்கூடிய திறமை, லட்சிய உணர்ச்சி எல்லாம் எனக்கு தெரியும். அவருடைய திறமை, லட்சிய உணர்ச்சி எல்லாம் உண்மையிலேயே பலன் தரவேண்டும் என்பது தான் என்னுடைய ஆசை. பொது வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் போது கொஞ்சம் சிந்தனை செய்து பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நான் சொல்லுவதை அவர் தவறாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள் என்பதிலே எனக்குப் பூர்ணமான நம்பிக்கை இருக்கிறது.

இத்துடன் இங்கு இருக்கும் அங்கத்தினர்களெல்லோரும் என்னுடன் ஒத்துழைத்தது மாத்திரமல்ல—எல்லோருமே நல்ல உணர்ச்சியுடன் எனக்கு ஒரு சக்தியை கொடுத்து வந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன், இந்தச் சபையிலே சபாநாயகராகப் பணியாற்றி வந்த எல்லோருக்குமே என்னுடைய பணிவான மரியாதையைத் தெரிவித்துக்கொள்வது மிகவும் அவசியம். திரு. சிவசண்முகம் பிள்ளை அவர்கள் நான் இந்த சபைக்கு வந்தபோது முதலில் சபாநாயகராக இருந்தார். அதற்குப் பிற்பாடு திரு. கோபால மேனன் இருந்தார். சென்ற சட்டசபை கலையும்போது தாங்கள் தான் சபையைக் கலைத்தீர்கள். இந்தத் தடவையும் தாங்கள்
1-30 p.m. தான் தலைமை தாங்கி சபையைக் கலைக்கிறீர்கள். ஆகவே, அந்த ஒரு பொறுப்பு உங்களிடம் வர இருக்கிறது என்பதைப் பற்றி நான் இன்றைக்கு அதை ஒரு மகிழ்ச்சியாக தெரிவிக்க முடியாது. அவரே கூடுகின்ற காலத்திலேயும் தலைமை வகிக்கக்கூடிய நிலைமை ஏற்படுமா என்று எதிர்பார்க்கவேண்டுமென்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். (ஆரவாரம்.)

எல்லோருடைய அன்பையும், மதிப்பையும் பெற்றிருந்த டாக்டர் யு. கிருஷ்ணராவ் அவர்கள் இன்றைக்கு இந்த நிகழ்ச்சியிலே இருந்திருப்பார்களேயானால், எவ்வளவு பெருமைப்பட்டிருப்பார்கள், மகிழ்ச்சியுற்றிருப்பார்கள் என்பதை நாம் கொஞ்சம் கற்பனை செய்து பார்க்க கடமைப்பட்டவர்கள். அவர் மறைந்தது ஒரு பெரிய குறையே. அந்த இடத்தைப் பூர்த்தி செய்யக்கூடிய முறையிலே, அடுத்த சபையிலே நல்ல சபாநாயகர் ஒருவரைத் தேர்ந்தெடுப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இங்கிருக்கக்கூடிய எல்லா அங்கத்தினர்களும் இங்கே மறுபடியும் வரலாம் என்ற நம்பிக்கை உள்ளவர்கள். சூழ்நிலை எப்படியிருந்தாலும், தேர்தல் முடிவு தெரியும் வரையிலே தேர்தலிலே ஜெயித்து விடலாம், தொடர்ந்து இங்கு வரலாம் என்ற நம்பிக்கையிலே இருக்கக் கூடியவர்கள். எனக்குத் தெரிந்தவரையிலே என்னுடைய நிலைமை அதற்கு நம்பிக்கை அளிக்கக்கூடியதாக இல்லை. எப்படியும் வெளியே போக

15th December 1961] [Sri C. Subramaniam]

வேண்டிய உறுதிதான் ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். என்னை ஒரு சமயம் இந்த கணத்திலேயே இங்கிருக்க வேண்டுமா, பார்லிமெண்டுக்கு போக முடிவு செய்துவிட்டீர்களா என்று கேட்டிருந்தால், என்ன பதில் சொல்வது என்று தெரியாத நிலைமைதான் என்னைப் பொறுத்த வரையிலே ஏற்பட்டிருக்கும். ஏனென்று சொன்னால், இந்தச் சபையிலேயே நான் பிறந்து வளர்ந்தது போன்ற ஒரு உணர்ச்சி பெற்றிருக்கிறேன். இந்தச் சபை தான் என்னை வளர்த்திருக்கிறது. அந்த உணர்ச்சிதான் இன்னும் என் மனதிலே இருக்கிறது. இந்தச் சபையை விட்டுப் போகக்கூடிய கட்டம் ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால், அது உண்மையிலேயே பெரும் மன வருத்தத்தைக் கொடுக்கக்கூடியதாகத்தான் இன்றைக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆனால் பொது வாழ்க்கையிலே இருக்கக்கூடியவர்கள் இதுமாதிரி விலகிக் கொள்வதற்குத் தயாராக இருக்கவேண்டுமென்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மந்திரியாக இருந்தால், இறக்கும் வரையிலே மந்திரியாகவே இருக்க வேண்டுமென்று எண்ணுவது தவறு. ஆகவே, நானாகவே விலகிக் கொள்ள வேண்டும் என்பதும் என்னுடைய கருத்தாகும். அதுவும், உங்களுடைய பாராட்டுதல்கள் இருக்கக்கூடிய காலத்திலேயே நான் இந்தச் சபையிலிருந்து விலகிக் கொள்வது நல்லது என்பது ஒரு பக்கம். இன்னொரு பக்கம் வாழ்த்துதலும், போற்றக்கூடிய சூழ்நிலையும் எனக்கு ஏற்பட்டிருக்கிறதே என்ற அளவுக்கு மகிழ்ச்சியும்கூட. நான் எங்கு சென்றாலும், உங்களுக்கு என்னுடைய கொள்கை ஒன்றுபட்டிருந்தாலும், இல்லாவிட்டாலும் உங்களுடைய நல்லெண்ணம், ஆசி என்றைக்கும் இருக்கும் என்பதிலே சந்தேகம் கிடையாது. அதேபோன்ற நம்பிக்கை தமிழ் மக்களிடத்திலேயும் இருக்கும் என்ற நம்பிக்கையோடுதான் உங்களிடத்திலிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன்.

இந்த சபை தொடர்ந்து இருக்கக்கூடிய ஒரு சபையாகும். ஒரு அங்கத்தினர் வேண்டுமானால் மாறலாம், ஓடுகின்ற ஆற்றைப்போல. கணத்திற்கு கணம் ஆற்றிலே புதிய தண்ணீர் வந்துகொண்டிருப்பதுபோல, ஒருசில அங்கத்தினர்கள் மாறினாலும், இந்தச் சபை தொடர்ந்து இருக்கக்கூடியதாக இருக்கிறது என்பதை நாம் பார்க்கின்றோம். ஆகவே, இப்போது பணியாற்றக் கூடியவர்களுக்குப் பின்னால் மற்றவர்கள் வருவார்கள். ஆனால், நாம் சாதித்ததை ஐந்து வருஷத்திற்கு, பத்து வருஷத்திற்கு, ஏன் ஐம்பது வருஷத்திற்குப் பின்னாலே அல்லது பல நூற்றாண்டுகளுக்குப் பின்னாலே ஒரு சமயம் பார்ப்பார்களானால், "பரவாயில்லை, நம்முடைய முன்னோர்கள் நல்லமுறையிலே பணியாற்றியிருக்கிறார்கள்" என்று சொல்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இந்த நம்பிக்கை நூற்றாண்டுகளுக்குப் பிற்பாடு இருக்கக்கூடியவர்களுடைய உள்ளத்திலே, அவர்கள் நம்மைப் பற்றிப் பார்க்கும்போது அவர்களுக்கு இப்படிப்பட்ட ஒரு நம்பிக்கை ஏற்படும், இப்படிப்பட்ட ஒரு முடிவையும் சொல்வார்கள் என்றே நான் கருதுகிறேன். அதே முறையிலே இனியும் வரப்போகின்றவர்கள் பணியாற்ற வேண்டுமென்ற அளவிலே என்னுடைய கருத்

தைத் தெரிவித்துக்கொண்டு, மறுமுறையும் உங்களோடுகூட பழகிய காலத்திலே சில சமயங்களிலே விவாதத்தின்போது அல்லது வேறு காரணத்தின்போது உங்களுக்கு கோபம் வரக்கூடிய முறையிலே வார்த்தைகள் சொல்லியிருக்கலாம், நடந்துமிருக்கலாம், அதையெல்லாம் என்னுடைய பொறுப்பை நிறைவேற்றவேண்டுமென்ற முறையிலே செய்தவை என்று ஏற்றுக்கொண்டு, இன்றைக்கு நான் உங்களிடமிருந்து விடை பெற்றுக்கொள்ளும்போது, உங்களுடைய நல்லாசிகளையெல்லாம் கொடுக்க வேண்டுமென்று மறுபடியும் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். (ஆரவாரம்.)

DEPUTY SPEAKER : The question is :—

'That the Madras Appropriation (Vote on Account) Bill, 1961 (L.A. Bill No. 58 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

### IV.—ANNOUNCEMENTS—*cont.*

### (2) REVIEW OF THE WORK IN THE ASSEMBLY

DEPUTY SPEAKER : Hon. Leader of the House, Hon. Leader of the Opposition, Leaders of the other Opposition Parties, and Hon. Members of the Assembly :

The Second Assembly under the Constitution is coming to a close. This Assembly included many distinguished persons in Law, Science, Politics, Economics, Agriculture and Social Welfare : Every one of them did his work well. There are 13 women Members who played a prominent role in the activities of this House. This Assembly was fortunate in having Dr. U. Krishna Rau as Speaker for four years who did his work exceedingly well.

This Assembly has done very good work and it can be proud of the same. Even yesterday one Hon. Member said that there were breezes in other Legislatures or Parliaments but that there was no such thing here. Though hot words were exchanged between ministerialists and opposiiton Members, they were forgetten even before the Members left the House. I thank all the Hon. Members for the curtesy and co-operation they have extended to the Chair right through from the beginning of this Assembly.

I do not know how many of you would be contesting and how many of you would be successful. I wish all of you success.

I am also thankful to the Press for the co-operation they have given in the reporting of the proceedings. It is my duty to thank the Legislature Secretariat for the help they have given me on all occasions. I must also thank the Panel of Chairmen for helping me in presiding over the House during my absence.

I once again thank the Hon. Leader of the House, the Hon. Leader of the Opposition and the leaders of other Parties and all the Hon. Members for the co-operation and courtesy they have shown to the Chair during the last five years.